# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 17 Issue 1 August 2022 Rs.25
ஆண்டு 17 இதழ் 1 ஆகஸ்ட் 2022 ரூ.25

**இந்தியாவை கட்டிக்காக்கின்றது ஆங்கிலம்**

மணி வேலுப்பிள்ளை

**சங்க இலக்கியத்தில் கலகக் கவிதை**

இந்திரா பார்த்தசாரதி



# மனம்விட்டு பேசுங்கள்

## தற்கொலை தீர்வல்ல

பிரபு திலக்

ஆண்டு 17 இதழ் 01

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஆகஸ்ட்-2022 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# மனம்விட்டு பேசுங்கள்
## தற்கொலை தீர்வல்ல

பிரபு திலக்

தமிழ்நாடு முழுவதும் கடந்த கல்வியாண்டில் நடந்த 10, 12ஆம் வகுப்பு பொதுத் தேர்வுகளுக்கான முடிவுகள் ஜூன் 20ஆம் தேதி வெளியாகின. அன்று ஒரே நாளில் பொதுத்தேர்வு தோல்வி எதிரொலியாக தமிழ்நாடு முழுவதும் 11 பள்ளி மாணவர்கள் தற்கொலை செய்துகொண்டனர். மேலும், 28 பேர் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டு ஆபத்தான நிலையில் மருத்துவமனைகளில் சேர்க்கப்பட்டனர். அன்றிலிருந்து இன்றுவரைக்கும் சரி, அதற்கு முந்தைய சமீப நாட்களிலும் சரி, பள்ளி மாணவர்கள் தற்கொலை என்பது அதிகரித்துள்ளது. தினமும் செய்திதாள் படிப்பவர்களுக்கு, தொலைக்காட்சி செய்தி பார்ப்பவர்களுக்கு தற்கொலை என்பது புதிய செய்தியாக இருக்காதுதான். ஆனால், கல்வி பயிலும் மாணவ - மாணவிகளின் தற்கொலை பற்றிய செய்திகளும் தினசரி வர ஆரம்பித்துள்ளதான் சமீப கால அதிர்ச்சியின் உச்சம்!

அரியலூர் அனிதா தொடங்கி, செஞ்சி பெரவள்ளூர் பிரதீபா, திருச்சி சுபஸ்ரீ, திருப்பூர் ரிதுஸ்ரீ, பட்டுக்கோட்டை வைஷ்யா, விழுப்புரம் மோனிஷா, கோவை சுபஸ்ரீ, பட்டுக்கோட்டை ஹரிஷ்மா, அரியலூர் விக்னேஷ், மதுரை ஜோதி துர்கா, பொள்ளாச்சி கீர்த்திவாசன், வேலூர் சௌந்தர்யா, சேலம் ஆத்தூர் சுபாஷ் சந்திரபோஸ் என நீண்டு கடந்த ஒன்றிரண்டு ஆண்டுகளிலேயே எத்தனை மாணவ மணிகளை இழந்துவிட்டோம்.

நீட் தேர்வு.. பாலியல் தொல்லை.. தேர்வில் தோல்வி.. என காரணங்கள் மாறியிருக்கிறது, மரணங்கள் தொடர்கிறது. தேர்வில் தோல்வியா தற்கொலை.. காதல் தோல்வியா தற்கொலை...கேட்டது கிடைக்கவில்லையா தற்கொலை.. மொபைலில் விளையாட விடவில்லையா தற்கொலை.. நான் அழகாக இல்லை என்று ஒரு 12ஆம் வகுப்பு மாணவன் தன் உயிரை மாய்த்துக்கொண்டுள்ளான்.. காதலன் ஐஸ்கீரிம் வாங்கித் தரவில்லை என்று ஒரு தற்கொலை..



ஒரு உயிர் உருவாவது என்பது எவ்வளவு பெரிய போற்றுதலுக்கு உரிய செயல்; அதனால்தான், பிள்ளைப்பேறு பெற்றோர்களுக்கு கிடைத்த வரமாகவே பார்க்கப்படுகிறது. அப்படி கிடைத்த ஒரு அற்புதமான உயிரை அற்பக் காரணங்களுக்காக மாய்த்துக்கொள்வது எவ்வளவு வேதனை?

தற்கொலை தொடர்பாக வெளியாகும் சமீப ஆய்வுகள், அதில் காணப்படும் புள்ளி விவரங்கள் அதிர்ச்சி மேல் அதிர்ச்சி அளிப்பவை. மூன்று பேரில் ஒருவர், வாழ்வின் ஏதாவது ஒருகட்டத்தில் தற்கொலையைப் பற்றி யோசிக்கிறார்கள் என்கிறது ஆய்வுகள். மனக் கசப்புகளை தனிமையில் எண்ணி பார்க்கையில் தற்கொலையே தீர்வு என சிலர் நினைப்பதால், கடந்த சில ஆண்டுகளில் தற்கொலை செய்துகொள்பவர்களின் எண்ணிக்கை 60 சதவீதம் உயர்ந்துள்ளதாம். அதிலும் 15 முதல் 45 வயதுடையவர்கள் 90 சதவீதம் என்பதும், அதிலும் முக்கியமாக 15 வயதிற்கும் 24 வயதிற்கும் இடைப்பட்டவர்களே அதிகம் என்பதும் பெரும் அதிர்ச்சியை உண்டாக்குகிறது.

உலகளவில் அதிகரிக்கும் இளம் பருவத்தினர் தற்கொலைகளில் இந்தியாவுக்கே முதலிடம். இந்தியாவில் மாணவர்கள் தற்கொலை எண்ணிக்கையில் இரண்டாம் இடத்தில் உள்ளது, தமிழ்நாடு!

இப்போதெல்லாம் பொதுத் தேர்வு முடிவுகள் வெளியாகும் நாட்கள் நெருங்கும்போது, இந்த வருடம் எத்தனை மாணவர்கள் தற்கொலைகள் செய்துகொள்வார்களோ என பலரது மனமும் பதைபதைக்கத் தொடங்கிவிடுகிறது. வெற்றியை கொண்டாடும் மனமகிழ்ச்சி இருக்கும் நிலையில்,தோல்வியை தாங்கும் மனவலிமை இல்லாமல் போய்விட்டது.

நம் மாணவ மணிகளிடையே இடையூறுகளை எதிர்கொள்ளும் திறன் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது என்பதையே இது காட்டுகிறது. இடையூறுகள் யாருக்குத்தான் இல்லை? பிரச்சினைகள் நிறைந்ததுதான் வாழ்க்கை... பிரச்சினைகள் இல்லாமல் வாழ்பவர்கள்

என்று இந்த உலகில் யாரும் கிடையாது. அமெரிக்க அதிபருக்கும் இந்தியப் பிரதமருக்கும் தமிழ்நாடு முதலமைச்சருக்கும் பிரச்சினை இல்லையா?

தற்கொலை எண்ணம் கொண்டவர்கள் தங்கள் மனநிலையை மிக நெருங்கிய ஒருவரிடம் பகிர்ந்துகொண்டால்கூட அது எவ்வளவு முட்டாள்தனமான முடிவு என்பதை உணர்ந்துகொள்வார்கள். ஆனால், அப்படிப்பட்டவர்களில் பெரும்பாலானவர்கள் யாருடனும் தங்கள் எண்ணங்களை பகிர்ந்துகொள்வதில்லை என்பதுதான் இங்கு பிரச்சினையே. அப்படிப் பேசினால், தங்களுடைய தற்கொலை எண்ணங்களை பகிர்ந்தால், நெருங்கிய நண்பர்கள், உறவினர்கள் வருந்துவார்கள் என்று அவர்கள் தவறாகக் கருதுகிறார்கள். அது உண்மையில்லை. தங்கள் எண்ணங்களைப் பிறருடன் பகிர்ந்துக்கொள்ளும் போதுதான் ஒருவருக்குச் சுதந்தர உணர்வு கிடைக்கும், அவர்கள் தூய்மையாக உணர்வார்கள்.

எல்லா உணர்ச்சிகளையும் போல பயம், கவலை, வேதனை, விரக்தி போன்றவையும் கொஞ்ச நேரத்தில் குறைய வேண்டிய விஷயங்கள்தான். தன்னைத்தானே சேதப்படுத்திக் கொள்ள வேண்டும், தற்கொலை மூலம் வாழ்க்கையை முடித்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணுகிறவர்கள் அந்த எண்ணத்தை யாரிடமாவது பகிர்ந்துக்கொள்ளும்போது, அதன்பின்னர் தங்கள் முடிவை மாற்றிகொள்வார்கள்.

உங்க மனதுக்கு கஷ்டமாக இருக்கிறதா, நீங்கள் நம்புகிறவர்கள், உங்களுக்கு மிகவும் பிடித்தவர்களுடன் மனம் விட்டு பேசுங்கள். அப்பா - அம்மாவுடன் பேச முடியாத விஷயமா, யாராவது ஒரு பெரியவர் அல்லது நண்பர்கள் / தோழிகளுடன் மனதை விட்டு பேசுங்கள்.

சமீபத்தில் தற்கொலை செய்துகொண்ட கரூர் பிளஸ் 2 மாணவி, "பாலியல் துன்புறுத்தலால் சாகுற கடைசிப் பொண்ணு நானாதான் இருக்கணும்" என உருக்கமான கடிதம் ஒன்றையும் எழுதி வைத்துள்ளார். அவர் வேண்டுகொள் படி இனியொரு தற்கொலை நிகழாமல் இருக்க வேண்டும் என்றால் பெற்றோர்கள், உறவினர்கள் பங்களிப்பும் அவசியம்.

ஒரு மனிதன் / மனுஷியின் வாழ்க்கையில், அவர்கள் குழந்தையாகவும் இல்லாத, வயது வந்தவர்களாகவும் இல்லாத ஒரு பருவம் 'டீன் ஏஜ்'. தமிழில் விடலைப் பருவம், வளரும் இளமைப் பருவம், பதின் பருவம் என்று பலவாறாக குறிப்பிடுகிறோம். பத்திலிருந்து பத்தொன்பது வயதுக்குட்பட்டவர்களை இப்பருவத்தினராக உலக சுதாதார மையம் வரையறுத்துள்ளது.

'டீன் ஏஜ்' வாழ்க்கையில் மகிழ்ச்சியும் பரவசமும் ஏற்படும் ஒரு காலகட்டம். அத்துடன் உடல்ரீதியாகவும் மன ரீதியாகவும் பல மாற்றங்கள் ஏற்படும் காலகட்டமும்கூட. அதுவரை அவர்களுடன் சமூகம் கொண்டிருந்த உறவிலும் சமூகத்துடன் அவர்கள் கொண்டிருந்த உறவிலும் மாற்றங்கள் தோன்ற தொடங்கும் காலம்.

குறிப்பாக இந்த வயதில் உடலில் ஏற்படும் சில மாற்றங்களைக் கண்டு அவர்கள் குழப்பமடைவார்கள், மிகவும் கூச்சப்படுவார்கள், சிறிது தயக்கமும் அடைகிறார்கள். இதனால், வளரும் இளமைப் பருவத்தினர் பார்க்கும் பார்வை, அனுபவிக்கும் உணர்வுகள், எண்ணங்கள் எல்லாவற்றிலுமே ஒரு மாற்றம் காணப்படும்.

தொடக்கத்தில் இது தொடர்பான சரியான புரிதலோ, தெளிவோ இல்லாத குழந்தைகள் பயப்படுகின்றனர் அல்லது குழப்பமடைகின்றனர். இது எல்லாம் தொடர்பாக அவர்கள் முன் பல கேள்விகள் உள்ளன. எனவே, இக்காலகட்டத்தில் சரியான வழிகாட்டுதல் அவர்களுக்கு கட்டாயம் தேவை.

பாலியல் உட்பட எதைப் பற்றி வேண்டுமானாலும் தயக்கமில்லாமல் பேசுவதற்கு ஒரு விஷேச வழிகாட்டியின் உதவி தேவைப்படும் பருவம் இது. வழிகாட்டி இல்லாத குழந்தைகள் தனித்து விடப்படுகிறார்கள். அல்லது தவறான வழிகாட்டிகளிடம் மாட்டிக்கொள்கிறார்கள். இதனால், விடலைப் பருவத்தில் குறிப்பாக 15 வயதில் சிறுவர்களை விடவும் சிறுமிகளே அதிகம் பாதிப்புக்கு உள்ளாகின்றனர்.

எனவே, பருவ வயதில் ஏற்படும் மாற்றங்கள் தொடர்பாக குழந்தைகளுடன் மனத்தடையின்றி பேச பெற்றோர்கள் முன்வரவேண்டும். சில பெற்றோர்கள் கூச்சம் அடைவது தேவையற்றது. நாமும் சிறு வயதையும் இக்குழப்பங்களையும் கடந்து வந்தவர்கள்தான் என்ற எண்ணம் இருந்தால் அந்த கூச்சத்தை தவிர்த்துவிட முடியும்.

உடல் அளவிலும் சமூக அளவிலும் மன ரீதியாகவும் சரியாக இருக்கும் குழந்தைகளைத்தான் நலமான குழந்தைகள் என்று உலக சுகாதார மையம் சொல்கிறது.

'டீன் ஏஜ்' பருவத்தினர் பிரச்சினைகளும் குழப்பங்களும் தீர்க்கப்படாத போது, கவலைகள் அதிகரித்துக்கொண்டே வந்து படிப்பில் நாட்டம் குறையும். இதுவும் மனச்சோர்வை ஏற்படுத்தும். இவர்கள் தனிமையை விரும்பி மற்றவர்களிடம் இருந்து விலகி இருக்கத் தொடங்குவார்கள். மனச்சோர்வு காரணமாக பசியின்மை, எடை குறைவது, சோர்வடைதல், முடிகொட்டுதல் போன்ற விளைவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. கடைசியாக இது மனஅழுத்தத்தில் கொண்டு போய் சேர்க்கும்.

தற்கொலைகள் ஏதோ தற்செயலாக நிகழ்வதில்லை என்று கூறும் ஆய்வு முடிவுகள், தற்கொலை செய்துகொள்ளும் பதின்பருவத்தினரில் 90 சதவீதத்தினர், மனநல பிரச்சனை ஏதோ இருப்பதால்தான் அதைச் செய்கிறார்கள் என்றும் கூறுகின்றன.

ஒருவர் ஊக்கமற்று இருப்பதாக அல்லது சோர்வுற்று இருப்பதாக சில நேரங்களில் உணர்வது பொதுவாக உள்ள விஷயம்தான். ஆனால், இந்த உணர்வு அவரிடம் தொடர்ந்து நீண்ட நாட்களாக இருந்தால்,சம்பந்தப்பட்ட நபர் மன அழுத்தத்தினால் பாதிக்கப்பட்டுள்ளார் என எடுத்துக்கொள்ள வேண்டும்.

மன அழுத்தம் அபூர்வமான பிரச்சினையும் அல்ல, தீர்க்க முடியாத நோயும் அல்ல. உலகில் ஐந்து பேரில் ஒருவர் மன அழுத்தத்தால் பாதிக்கப்பட்டுள்ளதாக புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. வின்ஸ்டன் சர்ச்சிலும் ஆபிரஹாம் லிங்கனும்கூட மன அழுத்தத்தினால் பாதிக்கப்பட்டவர்கள்தான்.

சாதாரண ஜலதோஷப் பிரச்சினை போன்றதுதான் மன அழுத்தமும். மன அழுத்தத்துக்கு உள்ளானவர்களில் 90 சதவீதத்தினர் மருத்துவர்கள் பரிந்துரைத்த சரியான மருந்துகளின் உதவியுடன் முழுவதுமாக குணமடைந்து விடலாம். கண்டுகொள்ளாமல் விடப்படும் போதுதான் அது தற்கொலை உட்பட பல்வேறு பின்விளைவுகளுக்கு காரணமாகிவிடுகிறது.

மன அழுத்தம் உண்டாவதுக்கு காரணமாக, குறிப்பிட்ட எதாவது ஒரு காரணியை மட்டும் சொல்லிவிட முடியாது. அது உட்புற, வெளிப்புற காரணிகளின் கூட்டு விளைவால் ஏற்படுகிறது. மனஅழுத்தத்தை உண்டாக்குவதில் பாரம்பரியம், உளவியல், சமூகக் காரணிகள் ஆகிய மூன்றும் முக்கிய பங்கை ஆற்றுகின்றன.

குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு ஏற்கெனவே மனஅழுத்தம் இருந்தால் அவரது குழந்தைகளுக்கும் மன அழுத்தம் ஏற்பட வாய்ப்புள்ளது. இதைத்தான் பாரம்பரியகாரணிஎன்றுசொல்கிறோம்.முழுமையாக ஒத்திருக்கும்இரட்டைக்குழந்தைகளுக்குமனஅழுத்தம் ஏற்படுவதுக்கான வாய்ப்பு அதிகமுள்ளது.

அதிக எதிர்பார்ப்புகள், இறுக்கமான மனோபாவம், மற்றவர்களிடம் தொடர்ந்து குறை காண்பது போன்றவைகளாலும் மனஅழுத்தம் ஏற்பட வாய்ப்புண்டு. இதை உளவியல் காரணி என்கிறோம். நிதி இழப்பு, வேண்டப்பட்டவர்களுக்கு ஏற்படும் உடல் பிரச்சினைகள் அல்லது மரணம், குடும்ப உறுப்பினர்களுடன் தகராறு அல்லது தொடர்ச்சியான சச்சரவுகள், எதிர்பார்ப்புகள் பூர்த்தியாகமால் இருப்பது போன்றவை மன அழுத்தம் உண்டாக்கவல்ல சமூகக் காரணிகள்.

பசி உணர்விலோ அல்லது எடையிலோ மாற்றம், ஆற்றல் இழப்பு, களைப்பு, வழக்கமான நடவடிக்கைகளில் ஆர்வம் இழப்பு, ஒருமுகச் சிந்தனை அற்றிருத்தல், முடிவெடுக்க முடியாமல் திணறுவது, தூக்க முறைகளில் மாற்றம், கலக்கம் அல்லது சுணக்கம், தங்களையே குற்றம் காண்பது, தேவையற்ற குற்றவுணர்வு, அடிக்கடி மரணத்தையோ அல்லது தற்கொலையையோ நினைத்துப் பார்த்தல்.. இவை மன அழுத்தத்தின் பொதுவான அறிகுறிகள்.

குழந்தைகளைப் பொறுத்த வரைக்கும் பள்ளிக்குச் செல்ல மறுத்தல், படுக்கையில் சிறுநீர் கழித்தல், தேர்வுகளில் மதிப்பெண் குறைதல் ஆகியனவும் மன அழுத்தத்தின் அறிகுறிகளாக இருக்கலாம் என நம்பப்படுகிறது.

மேலே குறிப்பிடப்பட்டுள்ளவற்றில் ஐந்து அல்லது ஐந்துக்கும் மேற்பட்ட அறிகுறிகள் ஒருவரிடம் காணப்பட்டால், அவர் உடனடியாக மருத்துவ உதவியை நாடுவது நல்லது.

மேலும் நம்பிக்கையற்று இருப்பவர்கள்,போதைப் பொருள் உட்கொள்பவர்கள், நடத்தைக் கோளாறு உடையவர்கள், ஏற்கெனவே தற்கொலைக்கு முயன்றவர்கள், உடல் ரீதியாகவோ பாலியல் ரீதியாகவோ தொல்லைக்கு உள்ளானவர்கள், சட்ட ஒழுக்கச் சிக்கலில் இருப்பவர்கள், வீட்டிலிருந்து ஓடிப்போனவர்கள், தற்கொலை செய்து கொண்டவர்களின் நெருங்கிய நண்பர்கள் அல்லது உறவினர்கள், மரணம் அல்லது தற்கொலை பற்றி அதிகம் பேசுபவர்கள், தன்னைத் தானே அழித்துக்கொள்ளும் நடத்தைக் கொண்டவர்கள் போன்ற அறிகுறிகளைக் கொண்ட விடலைப் பருவத்தினரும் தொழில் ரீதியான மருத்துவ உதவியை நாடுவது அவசியம்.

அப்போதுதான் தற்கொலை எண்ணம் கொண்ட காலகட்டம் கடந்துசெல்லும் வரை அவர்களை நேரடிக் கவனத்தில் வைத்திருக்க முடியும்.

மன அழுத்தத்தால் பாதிக்கப்பட்டவர்கள் பல சமயங்களில் ஆதரவற்ற நிலையில் சிக்கிக் கொள்கிறார்கள். இதனால், ஒன்றையும் என்னால் செய்யமுடியவில்லை என்ற உணர்வில் மாட்டிக்கொள்கிறார்கள்.இப்படியான உணர்வுகளில் மாட்டிக்கொள்ள அவர்களை விடக்கூடாது. சிறிய, அடையக்கூடிய இலக்குகளை வரையறுத்துக் கொள்வதே சுலபமாக அதிலிருந்து அவர்கள் வெளியே வர வழிவகுக்கும். அதில் அவர்கள் சாதிப்பது, சுயமரியாதையை உயர்த்தும்.

தற்கொலைகள் தொடரக்கூடாது. தொடர நாம் அனுமதிக்கவும் கூடாது.●

# இந்தியாவை ஆங்கிலம் கட்டிக்காக்கின்றது!

**மணி வேலுப்பிள்ளை**



நேரு, காந்தி, பட்டேல்

இந்திய விடுதலைப் போராட்டம் இந்திய மொழிகளைவிட அதிகமாக ஆங்கில மொழியில் நடத்தப்பட்டது. இந்தியாவைக் கட்டியாண்ட பிரித்தானியரின் ஏகாதிபத்திய மொழியான ஆங்கிலம், இந்திய தேசிய பிதாக்களின் போராட்ட மொழிகளுள் தலையாயது! தேசிய பிதாக்களின் நாடளாவிய நோக்கையும் உலகளாவிய கண்ணோட்டத்தையும் ஆங்கிலம் ஒருங்கிணைத்தது.

காந்தியின் தலைமையில் இந்திய விடுதலை இயக்கத்தை வழிநடத்திய அமைப்பு Indian National Congress என்னும் ஆங்கிலப் பெயர் சூடியமை ஒன்றும் தற்செயலான சங்கதி அல்ல. பல்வேறு மொழிகள் வழங்கும் ஒரு நாட்டில் வாழும் மக்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் மொழியாகவிளங்கும் ஆங்கிலத்தில் பெயர்சூட்டுவதே பொருத்தம் என்பது தேசிய பிதாக்களுக்கு தெரிந்தே இருந்தது.



காந்தியின் முதன்மையான தொடர்புமொழி ஆங்கிலம். காந்திக்கும் தால்ஸ்தோய்க்கும் இடையே இடம்பெற்ற கடிதத் தொடர்பு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காட்டும்படி போதித்த யேசுவின் அகிம்சை நெறியை, தால்ஸ்தோயுடன் வைத்துக்கொண்ட கடிதத்தொடர்பு மூலமாக அவர் தெரிந்துகொண்டார்.

காந்தி இலண்டனில் வைத்து எட்வின் ஆர்னோல்டின் ஆங்கில மொழிபெயர்ப்பு மூலமாக பகவத்கீதையை

அறிந்துகொண்டார். குஜராத்தி மொழியில் காந்தி எழுதிய, "சத்திய சோதனை"யை தேசாய் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பின்னர் அதை எஞ்சிய இந்தியாவும் வெளியுலகமும் கண்டுகொண்டது.

சுவாமி விவேகானந்தர் வங்கமொழியைக் காட்டிலும் அதிகமாக ஆங்கிலத்தில் பேசியதாகவும் எழுதியதாகவும் தெரிகிறது. தாகூரின் புறவுலகத் தொடர்புமொழி ஆங்கிலம். 'கீதாஞ்சலி"யை அவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பின்னர் அதற்கு நோபல் பரிசு கிடைத்தது. ராதாகிருஷ்ணன் தமது மெய்யியல் நூல்களை ஆங்கிலத்தில் எழுதிக் குவித்தார்.

நேரு, தமது பேர்போன நூல்கள் இரண்டையும் (Glimpses of World History, 1934 & The Discovery of India, 1946) நேரே ஆங்கிலத்தில் எழுதினார். இந்திய சுதந்திர தின உரையை நேரு இந்தியில் அல்ல, ஆங்கிலத்தில்தான் ஆற்றினார். நாட்டு மக்களின் செவியிலும் உலக மக்களின் செவியிலும் விழும் வண்ணம் அவர் ஆங்கிலத்தில் ஆற்றிய உரையில் அவரது நாடளாவிய நோக்கும் உலகளாவிய கண்ணோட்டமும் இந்து பண்பாட்டு மரபும் குடியாட்சி விழுமியங்களும் பொதிந்துள்ளன.

1915இல் இந்து மகா சபையை அமைத்த சாவார்க்கர் கூட (அந்தமான் சிறையிலிருந்து) ஆங்கிலத்தில்தான் எழுத நேர்ந்தது. அதில் இந்துக்களை ஒரு தனி இனத்துவ, பண்பாட்டு, அரசியற் குழுமத்தவர் என்று அவர் வரையறுத்தார். இந்துசமயத்திலிருந்து தாம் சிலாவியெடுத்த இந்துத்துவ நகலை அசல் இந்து சமயமாக முன்வைத்தார்.

அதில், "இந்தியே இந்துக்களின் மொழி; வெள்ளையர் வருமுன் இந்தியா முழுவதும் இந்தி வழங்கி வந்தது; இராமேசுவரம் முதல் ஹரிதுவாரா வரை இந்தி பேசியபடியே ஒரு சாதுவினால் பயணிக்க முடிந்தது; அதுவே பழைய வரலாறு; இந்தியை அதற்குரிய பீடத்துக்கு ஏற்றுவதில் எதுவித புதுமையும் இல்லை; அது இந்தித் திணிப்பு ஆகாது..." என்கிறார் (Essentials of Hindutva, 1923).

ஹிட்லர் சிறையிலிருந்து எழுதிய 'Mein Kampf' 1925இல் வெளிவந்தது. அதே ஆண்டில் ஹெஜேவர் தோற்றுவித்த இயக்கம்: 'ராஷ்ட்ரிய ஸ்வயம் செவக் சங்.' இந்தியில் இதன் பொருள்: தேசிய தொண்டர் அணி.

இந்தி மற்றும் தேசியவாதம் மூலம் இந்திய தேசத்துக்கு ஆர்.எஸ்.எஸ். தொண்டாற்றப் புறப்பட்டது. 1980இல் அதன் அரசியல் கிளையாகிய அகில் பாரதிய ஜன சங்கின் வழித்தோன்றியதே பாரதிய ஜனதா கட்சி.

இலங்கைத் தீவைக் கட்டியாண்ட வெள்ளையர் 1833இல் தான்தோன்றித் தனமாக தமிழ், சிங்கள ஆள்புலங்கள் இரண்டையும் ஒரே ஆள்புலமாகக் கட்டியடித்தார்கள். அதுமுதல் 1948 வரை வெள்ளையர் ஆட்சியிலும், பிறகு 1956 வரை இலங்கையர் ஆட்சியிலும் தமிழ், சிங்களம், ஆங்கிலம் அடங்கிய மும்மொழி நெறிநின்று ஒரே நாடாக விளங்கியது இலங்கை. 1956இல் இயற்றப்பட்ட தனிச்சிங்களச் சட்டத்தினால் அடியோடு பிளவுண்டது. 1972இல் பௌத்தம் அரசமதம் ஆக்கப்பட்டது. தமிழ் ஈழக் கோரிக்கை வேர்விட்டது.

இங்கு ஒரு பெயர்ப் பொருத்தம் எமது கவனத்தை ஈர்க்கிறது. 1915இல் சவார்க்கர் தோற்றுவித்த இந்துமதவாத அமைப்பின் பெயர்: 'இந்து மகா சபை'; 1937இல் பண்டாரநாயக்கா தோற்றுவித்த சிங்கள இனவாத அமைப்பின் பெயர்: 'சிங்கள மகா சபை!' சொல்லளவிலும், செயலளவிலும் எத்துணை பொருத்தம்!

கோட்டாபய ராஜபக்ச இலங்கை அதிபராகப் பதவியேற்க முன்னர், அவர் ஒரு ஹிட்லர் என்று சாடப்பட்டார். அவரை ஆதரித்த ஒரு பிக்கு அவரிடம், உண்மையான ஹிட்லராக மாறி, அவ்வாறு சாடுவோர் கூறுவதை மெய்ப்பிக்கும்படி கேட்டுக்கொண்டார்! ஹிட்லரையும் முசோலினியையும் ஏற்றிப்போற்றிய ஆர்.எஸ்.எஸ்., ஜனசங் தரப்பினர் ஜின்னாவின் நிலைப்பாடு நியாயமே என்பதை மெய்ப்பித்தது போல!

இலங்கையிலும் இந்தியாவிலும் "ஒரே நாடு, ஒரே சட்டம்" என்று முழங்குவோர் ஒரு தனிப்பட்ட தரப்பின் தலைவர்களாகத் தம்மைத் தாமே வரித்துக்கொண்டவர்கள். ஆகவே முழு நாட்டுக்கும் பிரதிநிதிகளாக விளங்குவதற்கு இம்மியும் அருகதை அற்றவர்கள். காந்தியின் மொழியில் மேற்படி, "கிணற்றுத் தவளைகள்" தமது சிற்றறிவினைக் கொண்டு நாட்டு வளப்பத்துக்கு விளக்கமளிக்கத் தலைப்பட்டவர்கள்.

பாஜக அரசு இந்திய அரசியல்யாப்பையும் குடியாட்சி விழுமியங்களையும் நீதித்துறையின் நியாயாதிக்கத்தையும் மீறுவது கண்டு, "நான் அஞ்சுகின்றேன்" என்று கூறுகிறார் அமர்த்தியா சென் (London Guardian, 2020-10-26). "இந்து தேசியவாத அரசு சமயப் பகையை மேம்படுத்தியுள்ளது; இந்தியாவின் சமயச் சார்பற்ற மரபுகளை கருவறுத்துள்ளது" என்று அவர் சாடுகிறார்.

சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் இந்தி பேசாத நாடாளுமன்ற உறுப்பினராகிய கனிமொழியிடம், "நீர் இந்தியரா?" என்று மத்திய கைத்தொழில் பாதுகாப்பு படை (CISF) அதிகாரி



சாவர்க்கர்

ஒருவர் கேட்டிருக்கிறார். அதாவது, இந்தி பேசாத இந்தியர்கள், இந்தியர்கள் அல்லர்! இந்திய முஸ்லீங்கள் மட்டுமல்ல, இந்தி பேசாத இந்தியர்களும் இந்தியர்கள் அல்லர்!

இதே பேரினவாதப் போக்கு இலங்கையிலும் உச்சத்தை தொட்டுள்ளது. அதற்கோர் எடுத்துக்காட்டு: சில தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர்கள் படைமுகாங்களுக்குச் சென்று கொரனா தடுப்பூசி ஏற்ற மறுப்புத் தெரிவித்தபோது, "அவர்கள் இந்த நாட்டவர்கள் அல்லர்" என்று சாடியிருக்கிறார் படைத்தளபதி சர்வேந்திர சில்வா!

எத்தனையோ சாபங்களையும் ஆரூடங்களையும் மீறி, ஒருங்கிணைந்து நீடித்து நிலைத்துள்ள இந்தியக் குடியரசை, இந்திய அரசியல் யாப்பின் சிறப்பியல்புகளை, குடியாட்சிவிழுமியங்களை, சுதந்திர நீதித்துறையை, ஆங்கிலக் கல்வியின் கொடையை தேர்ந்துதெளிவதற்குவேண்டிய ஞானமும் முதிர்ச்சியும் மதிநுட்பமும் அற்றவர்கள், இந்துத்துவத்தையும் இந்தியையும் கொண்டு இந்தியாவை ஒருங்கிணைக்க முனையும் பைத்தியக்காரத்தனத்தில் பொதிந்துள்ள ஒழுங்குமுறை வியக்கத்தக்கது (Though this be madness, yet there is method in't - Shakespeare).

இந்தியாவின் பல்வண்மை சவார்க்கர், ஹெஜேவர் முதலியோரின் கண்களுக்கு நாடளாவிய சிதைவாகவும் சிதிலமாகவும் தெரிந்தது அன்று. தனது தனித்துவத்தை இழந்து, சிதறுண்டு, சீரழியும் இந்தியாவை இந்தியையும் இந்துத்துவத்தையும் கொண்டு ஒன்றுபடுத்த முனைந்து, அதைச் சிதறடிக்கப் பாடுபடுகிறது பாஜக இன்று.

உருதுமொழி மட்டுமே பாகிஸ்தானின் ஆட்சிமொழி என்று கிழக்கு பாகிஸ்தானில் வைத்து ஜின்னா முழங்கியமை வங்கதேசப் பிரிவினைக்கு வித்திட்டதையும், இலங்கையில் தனிச்சிங்களச் சட்டம் பிரிவினைப்போராட்டத்துக்கு இட்டுச் சென்றதையும் ராமச்சந்திர குகா, சசி தரூர் இருவரும் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

1930களில் எழுந்த திராவிடக் கோரிக்கையையும் 1947இல் நிகழ்ந்த பாகிஸ்தான் பிரிவினையையும் 1971இல் தோன்றிய வங்கதேசத்தையும் 1976இல் ஓங்கிய தமிழ் ஈழக் கோரிக்கையையும் 1980களில் ஒலித்த காலிஸ்தான் முழக்கத்தையும் அத்தகைய நிலைப்பாடு நியாயப்படுத்துகிறது.

1948இல் மத்திய நிதி அமைச்சர் கிருஷ்ணமாச்சாரி இந்திதிணிப்பை, "இந்தி ஏகாதிபத்தியம்" (Hindi Imperialism) என்று சாடியதையும், "இந்தி பேசும் இந்தியாவா முழு இந்தியாவா என்பதை வடமாநில நண்பர்களே தெரிவு செய்யட்டும்!" என்று முழங்கியதையும் அதே நிலைப்பாடு நியாயப்படுத்துகிறது.

1947இல் என்றென்றும் செல்லுபடியாகும் வண்ணம் நேரு ஆங்கிலத்தில் ஆற்றிய சுதந்திர தின உரையில் ஒரு கூறு: "பற்றுறுதி கமழும் இத்தருணத்தில் இந்தியாவுக்கும் இந்திய மக்களுக்கும் இன்னும் பாரிய மானுட குறிக்கோளுக்கும் தொண்டாற்ற எங்களை நாங்கள் அர்ப்பணிக்க உறுதிபூணல் தகும். சுதந்திர தீபத்தை ஏந்தி, எங்களைச் சூழ்ந்த இருள்மீது ஒளிபாய்ச்சிய சுதந்திர சிற்பியை, எங்கள் நாட்டின் பிதாவை, இந்தியாவின் பழம்பெரும் ஆத்மாவின் திருவுருவை இன்றைய நாளில் முதன்முதல் நாங்கள் எண்ணிப் பார்க்கின்றோம்.

நாங்கள் பெரிதும் அருகதையின்றியே அன்னாரைப் பின்தொடர்ந்து வந்துள்ளோம். அவரது வழியிலிருந்து நாங்கள் விலகிச் சென்றுள்ளோம். ஆனாலும் நாங்கள் மட்டுமல்ல, அடுத்த தலைமுறையினரும் அந்த வழியை நினைவில் வைத்திருப்பார்கள்; வீறார்ந்த விசுவாசமும் வலிமையும் தீரமும் பணிவும் கொண்ட மகத்தான இந்திய மகனை தமது இதயங்களில் பதித்து வைத்திருப்பார்கள்; காற்று எவ்வளவு தூரம் கிளம்பி வீசினாலும் புயல் எவ்வளவு தூரம் எழுந்து சூறையாடினாலும் அந்த சுதந்திர தீபத்தை என்றுமே நாங்கள் அணையவிடப் போவதில்லை" (நேரு, 1947-08-14).

சரியாக 73 ஆண்டுகள் கழித்து, பூமி பூசை



ஹெஜேவர்

நடத்தி, புதிய நாடாளுமன்றத்துக்கு அடிக்கல் நாட்டி, இந்தியில் உரையாற்றியிருக்கிறார் பிரதமர் மோடி! இந்துத்துவத்துக்கும் இந்தித்துவத்துக்கும் புதுவீடு கட்டுவதற்கு அடிக்கல் நாட்டியுள்ளார் (2020-12-10).

ஹிட்லரை நயந்தவர் கோல்வால்க்கர். மனுவின் சாதியத்தை மெச்சியவர். இந்திய அரசியல் யாப்பைக் கடிந்தவர். அவரது பெயரை கேரளாவில் ராஜீவ் காந்தியின் பெயர்கொண்ட ஒரு தொழில்நுட்ப நிலையத்தின் இரண்டாவது வளாகத்துக்கு சூட்டும் முடிபை மத்திய அரசு அறிவித்துள்ளது. இது ஒரு பெண்ணை மானபங்கப்படுத்திய காமுகனையே அந்த அபலையின் கணவனாக நிறுத்துவதற்கு நிகரானது.

புனே மாநகரில் ஒரு கோட்சே அறிவகத்தை (Godse Gyan Shala) இந்து மகா சபை அமைத்துள்ளது. காந்தியை இந்தியாவின் துரோகி என்றும், அவரை கோட்சே கொன்றது நியாயமே என்றும், இந்தியா இந்துக்களுக்குரிய நாடு என்றும், 20 கோடி இந்திய முஸ்லீங்களும் பாகிஸ்தானுக்குப் பெயரவேண்டும் என்றும்... இந்து மகா சபையின் செயலாளர் தேவேந்திர பாண்டே முழங்கியுள்ளார்!

“உங்கள் சமயம் எது?” என்ற வினாவுக்கு, “நான் ஒரு முஸ்லீம், இந்து, கிறிஸ்தவன், யூதன்” என்று விடையளித்தார் காந்தி. “ஓர் இந்துவால் மட்டுமே அப்படிக் கூற முடியும்” என்றார் ஜின்னா. ஆதலால்தான், “எல்லாச் சமயங்களையும் மெய்யானவை என்றே நாங்கள் ஏற்றுக்கொள்கின்றோம்” என்று முழங்கினார் சுவாமி விவேகானந்தர் (உலக சமய மாநாடு, சிக்காகோ, 1893-09-11).

“இறைவன் உண்டு என்பவருக்கும் இறைவன் இல்லை என்பவருக்கும் இந்து சமயத்தில் சரிநிகர் இடம் உண்டு” என்பதை தரூர் தமது நூலில் (Why I am a Hindu, 2018) விளக்கியுரைத்துள்ளார். இந்து பண்பாட்டு மரபு வேறு, இந்துத்துவம் வேறு என்பதைப் புரிந்துகொண்டவர்கள் காந்தியும் நேருவும். காந்தி கோயிலுக்கே போனதில்லை என்கிறார் குகா. ஒரேயொரு தடவை (மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்குள் தலித்து மக்களை அனுமதிக்கும் நிகழ்வுக்கு மட்டும்) அவர் போனதுண்டு.

காந்தி பிரிவினையை தடுக்கும் நோக்கில் பிரதமர் பதவியை ஜின்னாவுக்கு ஈந்தபொழுது, அதற்கு நேருவோ பட்டேலோ மறுப்புத் தெரிவிக்கவில்லை. பிறகு நேருவுக்கு அதை ஈந்தபொழுது, பட்டேல் மறுப்புத் தெரிவிக்கவில்லை. மூவரின் பெருந்தன்மைக்கும் தோழமைக்கும் இவ்விரு நிகழ்வுகளும் சான்று பகர்கின்றன.

“எனது வழித்தோன்றல் ராஜாஜியுமல்ல, சர்தார் வல்லபாயுமல்ல, ஜவகர்லாலே! நான் போன பிறகு, அவரே எனது மொழியைப் பேசுவார்” என்று அறிவித்தார் காந்தி. “எனது மொழி” என்று காந்தி கூறியது அவரது தாய்மொழியாகிய குஜராத்தியை அல்ல, தமது நாடளாவிய நோக்கையும் உலகளாவிய கண்ணோட்டத்தையுமே ‘எனது மொழி’ என்று அவர் குறிப்பிட்டார்.

நேருவின் அமைச்சரவையில் துணைப் பிரதமர், உள்துறை அமைச்சர், மாநில அமைச்சர் பதவிகளை பட்டேல் உளமுவந்து ஏற்றுக்கொண்டார். எனினும் காந்தியும் நேருவும் பட்டேலுக்கு அநீதி இழைத்துவிட்டது போலவும் அதற்காக அவர்களைத் தண்டிப்பது போலவும் பாஜக நடந்துகொள்கிறது. பட்டேலுக்கு நர்மதா ஆற்றங்கரையில் 2,989 கோடி ரூபா செலவில், 597 அடி உயரமான சிலையெழுப்பி அம்மூவரதும் பெருந்தன்மையை சிறுமைப்படுத்தியுள்ளது; அவர்களது தோழமையை கீழ்மைப்படுத்தியுள்ளது.

பிரதமர் மோடி திரைநீக்கம் செய்துவைத்த அச்சிலைக்கு “ஒற்றுமைச் சிலை” என்று பெயர் சூட்டப்பட்டமை ஒரு முரண் அணி போல் சுவைக்கிறது. பட்டேல் தம் வாழ்நாள் முழுவதும் ஒரு காங்கிரஸ்காரராகத் திகழ்ந்தவர். வேண்டுமானால்,

தொடர்ச்சி 13ஆம் பக்கம்



SRI VEERA'S GROUP
SRI VEERA'S CREATIONS
பல ஜவுளி கடை முதலாளிகளை உருவாக்கும் ஸ்தாபனம்
ஸ்ரீ வீராஸ் கிரியேஷன்ஸ்
SRI VEERA'S CREATIONS
(Silks Textiles & Readymade Showroom)
மொத்த விலை ஷோரூம்
Wholesale showroom
www.sriveeras.com
www.facebook.com/sriveerascreations
2 Wheeler & Car Parking வசதியுடன்
எண். 51-52/1, M.C. ரோடு, சென்னை - 600 021.
போன் : 2590 1771, 2590 1772, 2590 1773, 2590 1774

10ஆம் பக்கத் தொடர்ச்சி



கோட்டாபய ராஜபக்ச, மோடி

காந்தியின் இடதுபுறம் நேருவும் வலதுபுறம் பட்டேலும் நிலைகொண்டதாக வைத்துக்கொள்ளலாம். அத்தகைய தோழமையைப் பொருட்படுத்தாமல், காந்தியையும் அவர் தேர்ந்தெடுத்த நேருவையும் பாஜக திட்டமிட்டு இருட்டடிப்புச் செய்கிறது.

இந்தியா ஒரு பாகிஸ்தானாக மாறக்கூடாது என்று எச்சரித்தார் காந்தி. பாகிஸ்தானிய புலமையாளர் அக்கானி (Husain Haqqani), "இந்தியா ஒரு பாகிஸ்தானாக மாறக்கூடாது, பாகிஸ்தானே ஓர் இந்தியாவாக மாறவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார் (Reimagining Pakistan, 2018).

காந்தியின் எச்சரிக்கையையும் அக்கானியின் வேண்டுகோளையும் புறக்கணித்து, வேற்றுமைக்குத் தூபமிட்டு வருகிறது பாஜக.

தமிழகத்தில் தாமும் தம் பாடுமாகத் திரியும் நடிகர்களை தம்பக்கம் வலிந்திழுத்து, திரைக்கவர்ச்சி மூலம் தமிழக மக்களை அடிப்படுத்தி, அங்கு தமது குறிக்கோளை எய்த பாஜக காய்நகர்த்தி வருகிறது. 1930களில் ராஜாஜியின் இந்திக் கொள்கைக்கு எதிராகப் பெரியார் தலைமையிலும் 1960களில் பக்தவத்சலத்தின் இந்திக் கொள்கைக்கு எதிராக அண்ணா தலைமையிலும் மேற்கொள்ளப்பட்ட போராட்டத்துக்கு இனி தமிழகத்தில் புத்துயிரூட்ட நேர்ந்தால், அதற்குத் திராவிடத்துவமல்ல, இந்துத்துவமே காரணமாகும்.

இந்தி மத்திய ஆட்சிமொழியாவதை காந்தி, நேரு, பட்டேல் போன்றவர்கள் விரும்பியது உண்மையே. அதற்கு ஏனைய மாநிலங்களில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் எதிர்ப்புக் கிளம்பியபொழுது, "மாநிலங்கள் ஏற்கும்வரை ஆங்கிலம் தொடர்புமொழியாக நிலைக்கும்" என்று 1959இல் நேரு வாக்குறுதி அளித்தார். அவரது வாக்குறுதிக்கு 1963இல் சட்டப்பேறு அளிக்கப்பட்டது.

மேற்படி சட்டத்தை முன்னெடுத்துச் செல்ல வேண்டிய தேவையை உணர்த்திய பாஜகக்கு நன்றி செலுத்தவேண்டும்! இந்தியாவின் ஒருமைப்பாட்டைக் கட்டிக்காப்பதற்கு "ஆங்கிலமும் மத்திய ஆட்சிமொழி ஆகும்" என்று அரசியல்யாப்பில் பொறிக்கப்படுவது இன்றியமையாத ஒன்றாகியுள்ளது.

ஏற்கெனவே பெரிதும் செயலளவில் (இந்தியுடன்) ஆங்கிலம் மத்திய ஆட்சிமொழி போலவே வழங்கி வருகிறது. பெயரளவிலும் அது யாப்பில் இடம்பெறுவதை இந்தி வழங்காத மாநிலங்கள் வரவேற்றல் திண்ணம். இந்தியாவின் ஒருமைப்பாட்டினைக் கருத்தில் கொண்டு, (இந்தியுடன்) ஆங்கிலத்தையும் மத்திய ஆட்சிமொழி ஆக்கும் வாய்ப்பினை மத்திய அரசும் மாநில அரசுகளும் சீர்துக்கிப் பார்த்தல் நன்று. ●

மணி வேலுப்பிள்ளை
<manivelupillai@hotmail.com>

# ஜீயின் மூன்று தீர்மானங்கள்

**கருணாகரன்**

ஓவியம்: **Jarek Puczel**

ஜீ எடுத்திருந்த முக்கியமான மூன்று தீர்மானங்களையும் குறித்து அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அது ஒரு சீரியஸான கடிதம். ஒரே மூச்சில் எழுதப்பட்ட அந்தக் கடிதத்தைத் திரும்பப் படித்துப் பார்த்தபோது அதிர்ச்சியாக இருந்தது. அது கடிதத்தைப்போல வரவில்லை. ஒரு அறிக்கையைப் போலவேயிருந்தது. அதுவும் குறைகாண் அறிக்கையைப்போல. ஆகவே, அதை அவளுக்கு அனுப்ப முடியாது. சற்றுக் குரலை உயர்த்திப் பேசினாலே முகம் சுண்டிப் பேச்சை முறித்து விடுகின்றவளுக்கு இந்தக் குறைகாண் அறிக்கை கிடைத்தால் எப்படியிருக்கும்? என்பதால், அதிலே சில திருத்தங்களைச் செய்தேன். பிறகு பத்துத் தடவைக்கு மேல் மீள மீளப் படித்தேன். ம்ஹூம், அது கடிதமாக மாறுவதற்குப் பிடிவாதமாக மறுத்துக் கொண்டேயிருந்தது. அப்படியே அதைக் கிழித்துக் குப்பைக்குள் வீசி விட்டுப் படுத்துவிட்டேன். இரவு பாதியில் தூக்கம் கலைந்து எழுந்தேன்.

ஏதோ கனவு வந்துதான் தூக்கம் கலைந்திருக்க வேணும். எதைப் பற்றிய கனவென்று சரியாகப் புலப்படவில்லை. அலை மோதிக்கொண்டிருக்கும் கடற்கரையில் இரைச்சல்களின் நடுவே எங்கே போவதென்று தெரியாமல் தடுமாறுவதைப்போல ஒரு தோற்றம். கூர்ந்து யோசித்துப் பார்த்தபோது ஜீயைப் பற்றிய கனவே அது எனத் தோன்றியது. ஆனால், எந்தக் காட்சியும் சரியாகப் பதியவில்லை. அவளுடைய குரல் எங்கோ தொலைவில் கேட்பதைப் போலிருந்தது. அதேவேளை அவள் மிக அருகிலே, பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தாள். அவளை ஏதோ ஒரு மிருகம் துரத்துகிறது. அவள் ஓட முடியாமல் தவிக்கிறாள். அவளுடைய கால் பழுதடைந்திருக்கிறது. நடக்கவே முடியாமல் தடுமாறிக் கொண்டிருக்கிறாள். நான் அவளைத் தாங்குவதற்காகக் கைகளை நீட்டுகிறேன். என்னுடைய கைகளின் நீளம் போதவில்லை. ஆனால், அவள் மிக அருகில், மிகக் கிட்டவாகவே நிற்கிறாள். சாய்ந்தால் அப்படியே மடியில் விழக்கூடிய அளவு அருகில். ஆனாலும், என்னுடைய கைகளால் அவளைத் தாங்க முடியவில்லை. அவளை விரட்டும் விலங்கினைக் கலைப்பதற்கு முயற்சிக்கிறேன். அது என்னைப் பொருட்படுத்தவேயில்லை. ஜீ என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் பார்வையை எதிர்கொள்ள முடியாமல் குப்புற விழுகிறேன். புழுதியை வாரி இறைக்கும் காற்றில் தடுமாறிப் பின்வாங்குகிறது அந்த விலங்கு. அப்படியே சென்று நீருள் புதையுண்டு போகிறது.



ஜீ என்னைத் தூக்குகிறாள். அவளுடைய கைகள் என்னைத் தொடவேயில்லை. ஆனால், அவளால் தூக்கி நான் நிறுத்தப்பட்டிருக்கிறேன்.

இப்படித்தான் அந்தக் கனவு மங்கலாகத் தெரிந்தது.

ஏனோ தெரியவில்லை. மனம் கரைந்து துக்கமாகியது. உடல் குலுங்கி அழுதேன். அழுது ஓயும்போது மின்னலெனப் பளிச்சிட்டன சில நினைவுகளும் எண்ணங்களும். அந்த இரவில் அதைப் பின்வருமாறு எழுதினேன்.

ஒரு இளவேனிற் காலத்தில்தான் ஜீயைக் கண்டிருக்கிறேன். பின்னொரு நாள் அவளே இதை நினைவில் கொண்டு ஞாபகமூட்டினாள்.

“என்னை முதலில் எப்போது பார்த்தாய்?” என்று அவள் ஆர்வத்தோடு கேட்டபோது, “எப்போது கண்டேன்? எப்போது கண்டேன்” என்று நினைவில் ஊடுருவினேன். எதுவுமே புலப்படவில்லை. இருளாகவே இருந்தது எல்லாம். நினைவு மறதிக்குள் ஆழமாகச் சிக்குண்டவன் என்பதால் எதையும் துல்லியமாக உடனடியாகச் சொல்லி



விட வாய்ப்பதில்லை. அன்றும் அப்படித்தான். அவளுடைய கேள்விகளுக்குப் பதிலளிக்க முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தேன்.

உள்ளூரக் கடிந்துகொண்டு, அவள்தான் அந்த முதல்நாளைக் காண்பித்தாள். அந்த முதற்சந்திப்பை, அதற்குப் பிறகான தொடக்கங்களைப் பற்றியெல்லாம் ஏராளமாய்ச் சொன்னாள். தொடர்ந்து அந்தப் புள்ளியிலிருந்தே நினைவின் வழி நடந்து அவளையும் அவளுடைய தோழி ஏலாவையும் கண்ட காட்சியைத் துலக்கினேன்.

பல்கலைக்கழகத்தில் அன்று கூட்டம் முடிந்த பின், நண்பர்களோடு பேசிக் கொண்டிருந்த நான் எதேச்சையாகத் திரும்பியபோது அவர்கள் இருவரையும் கண்டேன். மடித்து விடப்பட்ட மெல்லிய நீல முழுக்கைச் சேர்ட்டும் கறுப்பு ஜீன்ஸ்சும் அணிந்திருந்தாள் ஜீ. இடையில் இறுக்கமாக ஒட்டிய பெரிய கறுத்த பெல்ட். கட்டையாக வெட்டப்பட்ட கூந்தல். அங்குள்ள பெரிய மரங்களுக்கு முன்பாக இருந்த நடையில் அவளும் ஏலாவும் நின்றனர். ஜீயையும் விட நிறம் கூடியவள் ஏலா. தங்கத்தை நெருங்கிய நிறம். என்றாலும் கண்களைச் சுண்டி, நிலைகொள்ள வைத்தது ஜீதான். தாமிர வண்ணத்திலான பொன்மயில். மீளவும் பாரெனக்கோரும் காந்த மலரென நின்றாள். ஒரு கணம் மனம் திகைத்துச் சுழன்றது. சந்தேகமேயில்லை, அது ரத்தத்தில் பாய்ந்தவொரு மின்னற் காட்சி.

ஆனாலும் நெருங்கி வந்து எதையும் பேசவில்லை நான். அவர்களும்தான்.

பிறகொருநாள் எப்படியோ என்னை அறிந்து ஏலாவோடு தேடி வந்தாள் ஜீ. வந்த அன்று ஓவியங்களைப் பற்றி ஏராளம் கேள்விகள் கேட்டாள். பேச்சு ஒளிப்படங்களின் பக்கமாகத் திரும்பியது. ஒளிப்படங்களுக்கும் ஓவியத்துக்குமிடையிலான உறவைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். திடீரெனக் கைப்பையிலிருந்து தான் எடுத்த படங்களைக் காண்பித்தாள் ஜீ. அத்தனையும் போர்க்களத்தில் எடுக்கப்பட்ட படங்கள். மிகச் சாதாரணமாக ஒவ்வொரு படங்களையும் தந்தபடியிருந்தாள். ஆனால், அந்தப் படங்களைச் சாதாரணமாக எடுத்திருக்கவே முடியாது.

போர் என்றால் எப்படியிருக்கும் என்றெனக்குத் தெரியும். கரணம் தப்பினால் மரணம் என்று சொல்வார்களல்லவா, அதையும் விடக் கணத்துக்குக் கணம் ஆவேசமாக முத்தமிடத் துடித்துக் கொண்டிருக்கும் மரணம் அங்கேயிருக்கும்.

மரணத்தின் ஆட்சியிலேயே அங்கே எல்லாமிருக்கும். மரணத்தை யார் வெல்கிறார்களோ, அவர்களே வெற்றியைப் பெறுவார்கள். இதுதான் அங்கே விதி. இப்படியான மரணத்தின் பிடிக்குள், அதனுடைய ஆட்சிக்குள் நின்று அதற்கெதிராகப் போரிடுவது வேறு. அதை இப்படிப் படம் பிடிப்பது வேறு. இது ஒரு பெரீய்ய சவால். இன்னொரு வகையில் பார்த்தால் சுத்த பைத்தியக்காரத்தனம். இருக்காதா பின்னே, சாவையே படம் பிடிப்பதென்றால் அதை வேறு எப்படித்தான் சொல்ல முடியும்? ஆனால், "இதுதான் பணி" என்று சிரித்தபடி சொன்னாள்.

இப்படிச் சாவின் மையத்தில் நின்று கொண்டு பிடித்த படங்களைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்? கண்கள் படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தனவே தவிர, மனம் அந்தக் களங்களில் அவள் எப்படி இயங்கியிருப்பாள் என்றே கணக்கிட்டுக் கொண்டிருந்தது. ஒரு கணம் உடல் சில்லிட்டுக் குலுங்கியது. தொண்டைக்குள் எதுவோ அடைப்பதைப்போலிருந்தது. கைகள் மெலிதாக நடுங்கின. ஆனால், அதைக் காட்டிக் கொள்ளவில்லை நான்.

ஏன் இப்படியொரு விதியில் போய் சிக்கிக்கொண்டிருக்கிறாள் என்று புரியாமலிருந்தது. ஆனால், அதைப்பற்றி அவளிடம் கேட்க முடியாது. அப்படிக் கேட்டாலும் அதற்குப் பதில் சொல்ல மாட்டாள். அதை ஒரு புன்னகையினால் எளிதாகக் கடந்து விடுவாள் ஜீ என்றெனக்குத் தெரியும். அவள் மட்டுமல்ல, அவளைப்போல இன்னும் ஏராளம் பேர் இப்படித்தான் சிக்கிப்போயிருக்கிறார்கள். ஒரு காலம் நானும் இப்படித்தானிருந்தேன். அபாயங்கள் வழமையாகியிருந்த களங்களில் அதை அறிந்தும் அறியாமலும்.

அவளோ எந்தச் சலனமுமில்லாமல் படங்களைக் கைமாற்றிக் கொண்டேயிருந்தாள். ஒவ்வொரு படத்தையும் பற்றிய என்னுடைய பதில் என்ன? அபிப்பிராயமென்ன என்று அறிவதற்காக என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஏலா மட்டும் இடையிடையே அந்தப் படங்கள் எடுக்கப்பட்ட களங்களைப் பற்றியும் சூழலைப் பற்றியும் விளக்கிக்கொண்டிருந்தாள். நம்பவே முடியாத வியப்பூட்டும் தருணங்கள் அவை. ஒரு கட்டத்தில் அங்கே நடந்துகொண்டிருந்த சண்டையில் ஜீயினுடைய கமெராவே உடைந்து நொருங்கி விட்டதென்றாள். இதைக் கேட்டபோது என்னுடைய நாக்கே உலர்ந்து விட்டது. நெஞ்சிலே மின்னல் வெட்டியது. நிச்சயமாக ஒரு நாள் இவர்கள் தங்களைப் பலியிடப்போகிறார்கள் என்று தோன்றியது. துக்கம் மேலேற, "இதெல்லாம் அவசியந்தானா?" என்று கேட்டேன்.

இருவரும் வேடிக்கையாகச் சிரித்தார்கள்.

"இதுதானே அழகு. எவ்வளவு சவாலிருக்கிறதோ அதற்குள் செய்யப்படுவதற்குத்தானே அழகும் மதிப்புமிருக்கு?" என்றாள் ஏலா.

இதற்குப் பதிலளிக்க முடியாது. அப்படி நான் பதில் சொன்னாலும் அதை ஏற்றுக்கொள்ளப்போவதில்லை இருவரும். அவர்களுடைய மனங்கள் அப்படி வடிவமைக்கப்பட்டு விட்டன.

கையிலிருந்த படங்களைத் தொடர்ந்து பார்க்க முடியாமலிருந்தது. ஆனாலும் ஜீயினுடைய எதிர்பார்ப்பை மீற முடியவில்லை. மின்னற்கணத்தில் பதிவாக்கிய அதிமின்னற் காட்சிகள். யாராலும் சாட்சியமாக்கப்படவே முடியாத சாட்சியங்கள். அன்று விடைபெற்றுச் சென்றபோது ஜீ நடக்கச் சிரமப்பட்டதைக் கவனித்தேன். "என்ன நடந்தது" என்று ஏலாவிடம் கேட்டேன். "பூந்தோட்டத்தில் முள் குத்தியது" என்று சிரித்தாள் ஜீ.

போர்க்களத்தில் வேறென்னவெல்லாம் நடக்கும்? எதுதான் கிடைக்கும் என்பதைச் சொல்லாமல் சொல்லிக்கொண்டு வண்டியிலேறிப் புறப்பட்டுப் போனார்கள். எல்லாவற்றையும் வேடிக்கையாகவே எடுத்துக் கொள்கிறார்களா? அதைத்தவிர வேறு வழியில்லை என்றுதான் இப்படிச் செய்கிறார்களா? ஆனால், யுத்தம் ஒன்றும் வேடிக்கையானதில்லையே! அது படு சீரியஸானது. ரத்தத்தை ருஸிப்பது. உயிரைக் குடிப்பது. கையையோ காலையோ கண்ணையோ அல்லது வேறு ஏதாவது உடல் உறுப்புகளையே சிதைப்பது அல்லவா!

ஏலாவும் ஜீயும் தோழிகளாக மட்டுமல்ல, துறைசார்ந்தவர்களாக இருப்பது கொஞ்சம் ஆறுதலாக இருந்தது. இருவரும் களத்தில் படம்பிடிக்கும்போது ஆளுக்காள் உதவியாகத் துணையிருப்பது நல்லது என்று எண்ணினேன். ஆனாலும் ஜீயினுடைய தெரிவுகளும் பாதைகளும் வேறாகவே இருந்தன. அவை தனித்த வழிகள். தனித்த தெரிவுகள். அத்தனைக்குள்ளும் அவள் தன்னை நிலைப்படுத்தி வந்தாள். அதைக்குறித்த கவனமே ஜீயோடு மெல்ல மெல்ல நெருங்க வைத்தது. இதற்குள் எதையெல்லமோ பேசியிருக்கிறோம். விவாதித்திருக்கிறோம். எவ்வளவோ காரியங்களைச் செய்திருக்கிறோம். ஆனாலும் ஒரு சொல்லையும் வீணாகச் சிந்தியதில்லை ஜீ. அளந்த வார்த்தைகள். எத்தனை மணி நேரமானாலும் அளவு மீறாத உரையாடல். எது தேவையோ அதைப்பற்றி மட்டுமே பேசுவாள். ஒரு போதுமே தனிப்பட தன்னைப் பற்றியோ வேறு யாரைப் பற்றியுமோ எதையும் சொன்னதில்லை. ஆனால், அவளுக்குள் ஏராளம் சங்கதிகளிருக்கின்றன என்பதை அவளுடைய கண்களின் வழியே அறிந்திருக்கிறேன். அதைப் பற்றிப் பேச வேண்டும் என்று பல தடவை



முயற்சித்திருக்கிறேன். ஆனால், ஜீ அதற்கிடமில்லாமல் வந்த வேலையைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பாள். அல்லது அது தொடர்பாக வேறு ஏதாவது.

இதனால், எதிலும் எல்லை மீறல்களுக்கு இடமேயிருந்ததில்லை. இப்படியெல்லாமிருப்பதற்கு எங்கே கற்றுக்கொண்டாள்? என்று யோசித்திருக்கிறேன். அமைப்பு அப்படி அவளைப் பயிற்றுவித்ததா? அல்லது அமைப்புக்கு ஏற்றமாதிரி தன்னை வடிவமைத்துக் கொண்டாளா? என்னதானிருந்தாலும் ஒருவருடைய இயல்பூக்கங்களை அமைப்புக் கட்டுப்படுத்துவதோ அல்லது அமைப்புக்கு அவற்றைத் தாரை வார்த்துக் கொடுப்பதோ நல்லதல்ல என்பது என்னுடைய எண்ணம். அமைப்பை நாம் முழுமையாக ஏற்று மனப்பூர்வமாக விரும்பினாலும் கூட. ஆனால், இதைப் பற்றியும் அவளோடு நான் பேசவோ வாதிடவோ விரும்பவில்லை. இதையும் ஜீ ஏற்றுக் கொள்ளப்போவதில்லை.

நான் அவளைக் காணும்போதெல்லாம் வேலை வேலை வேலை என்று ஓயாமல் ஓடிக்கொண்டிருந்தாள். அல்லது அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவள் இப்படியிருப்பதைப் பார்த்து சினமே வந்திருக்கிறது எனக்கு. அவளைப் போலப் பல்லாயிரம் பேர் அமைப்பிலிருக்கிறார்கள். அவர்களுக்கு அமைப்பும் பொறுப்புகளுமில்லையா? அவர்களுக்கு அதைக் குறித்த எண்ணமோ அக்கறையோ இல்லையா? இவளுக்கு மட்டுமென்ன அத்தனை கரிசனை?.

மழை பெய்து ஓய்ந்திருந்த ஒரு பின்னேரம், ஜீயைத் தேடி சென்றிருந்தேன். வளாகத்தின் முன்னிருந்த சந்திப்பு மையத்தில் என்னை இருக்கச் சொல்லி விட்டுச் சென்றாள் ஒருத்தி. கூடத்தின் முன்பாதியில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றில் இருந்தேன். கண்கள் கூடத்தை நோக்கின. அதன் நேர்த்தியை மனம் நோக்கிக் கொண்டிருந்தது. போடப்பட்டிருந்த நாற்காலிகள் கூட வித்தியாசமாக இருந்தன. அவற்றை நான் வேறெங்குமே பார்த்ததில்லை. மிலிட்டறிப்பச்சை நிறத்திலானவை. எங்கேதான் அதைத் தேடி எடுத்தாளோ! நிச்சயமாக அது ஜீயின் தெரிவுகளாத்தானிருக்கும்.

அங்குள்ள ஒவ்வொன்றிலும் மிளிர்ந்த ஒழுங்கும் ஈர்ப்பாயும் அச்சமூட்டுவதாகவுமிருந்தது. நானோ இந்த மாதிரி நேர்த்திக்கும் ஒழுங்குக்கும் மாறானவன். இதற்குப் பழக்கப்படாதவன். சிலபோது ஓரளவு ஒழுங்குகளோடிருந்தாலும் எப்படியோ விரைவில் அதெல்லாம் குலைந்து கலைந்து விடும். அப்படியொரு வரத்தைப் பெற்ற பிறவி. இந்த மாதிரிக் குலையா ஒழுங்கை அல்லது நேர்த்தியைக் கடைப்பிடிப்பதென்பது என் வாழ்வுக்குப் பெரும் சவாலே. அப்போது அங்கே வைக்கப்பட்டிருந்த ஓவியமொன்றை எதேச்சையாகக் கண்டேன். அது ஒரு பூங்கொத்தாக இருக்க வேண்டும். கறுப்பு வெள்ளை வர்ணத்தில் தீட்டப்பட்டது. எழுந்து சென்று அந்த ஓவியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது ஜீ வந்தாள்...

ஓவியத்தில் ஒன்றித்தூறி நான் நின்றதைக் கவனித்த ஜீ எதையுமே பேசவில்லை. வழமையைப்போல அமைதியாக நின்றாள். அவளுடைய அசைவைக் கண்டு ஓவியத்திலிருந்து விடுபட்டுத் திரும்பியபோது அந்த மண்டபத்தில் வானவில்லொன்று எதிரில் நிற்கக் கண்டேன்.

சட்டென உருகி, வண்ண உருக்கென ஆகினாள் ஜீ.

அன்று நீண்ட நேரம் ஒளியையும் வெளியையும் எப்படிக்கையாள்வது என்பதைப்பற்றிப் பேசினோம். "நிறங்கள் என்பது ஒளியின் விளைவு. ஒளியே அவற்றை உயிர்ப்பிக்கின்றன. அடையாளப்படுத்துகின்றன, வேறுபடுத்துகின்றன" என்றேன்.

"ஒளியே நிறங்களையும் வடிவங்களையும் காண்பிக்கிறது. ஒளியைக் கையாள்வதே கலை. உண்மையில் ஒளியே ஒரு கலைதான். அந்தக் கலையைக் கையாளும் கலையே உன்னுடையது. நீ ஒளி, வெளி, கோணம் என்ற அடிப்படையில் அதைச் சட்டகமாக்கி காட்சியாகக் கலையாக ஆக்குகிறாய்" என்றபோது, அமைதியாகச் சிரித்தாள். அதைத்தானே செய்துகொண்டிருக்கிறேன் என்பதைப் போலிருந்தது அந்தச் சிரிப்பு.

பேசி முடிந்து திரும்பியபோது எதை எடுத்து வந்தேன், எதை விட்டு வந்தேன் என்று நினைவில்லை. ஆனால், அந்த மண்டபத்திலிருந்த ஓவியத்தில் ஒளியும் வெளியும் அற்புதமாக வந்திருந்தது மட்டும் நினைவாக நின்றது. அது ஜீ வரைந்திருந்த ஓவியம்

என்று பின்னொரு நாள் ராமனுஜா சொன்னாள். அது இன்னொரு ஆச்சரியம்.

இது நடந்து ஏறக்குறைய பத்து ஆண்டுகளுக்குப் பிறகாக இருக்கலாம். முன்பனிக்காலமொன்றில் இன்னொரு ஓவியத்தோடு அவளைச் சந்தித்தேன். அது இதயத்தை அறுத்துத் தெருவில் எறிந்த நாள். அப்போது எல்லாமே மாறிவிட்டிருந்தன. யுத்தம் கூட முடிந்திருந்தது. ஜீ அடையாளம் தெரியாத அளவுக்கு மாறிப்போயிருந்தாள். அல்லது அந்தக் காலம்தான் அவளை அப்படி ஆக்கியிருந்ததா? அவளுடைய தலைமுடிகூட வளர்ந்திருந்தது. இதற்கு மாறாக எனக்கோ உதிர்ந்திருந்தது. இப்போது வீட்டிலே இருந்தாள் ஜீ. வெளிர் றோஸ் நிறத்தில் மேற்சட்டையும் சிவப்பில் ஸ்கேட்டும் அணிந்திருந்தாள். அது இன்னொரு வகையான அழகு. எல்லாவற்றையும் தலைகீழாகப் போட்டால் எப்படியிருக்குமோ அப்படி ஆகியிருந்தன எல்லாம்.

யுத்தம் முடிந்தபோது ஜீயைத் தேடிக்கொண்டிருந்தேன். அவளைப் பற்றிய தகவல்களே இல்லாதிருந்தது நீண்ட நாட்களாக. ஏலாவும் இன்னும் சிலரும் பிள்ளைகளோடு தப்பியிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். ஜீக்கு என்ன ஆகியிருக்கும்? எங்கே இருக்கிறாள்? என்று தேடிக் கொண்டிருந்தபோது ஒரு நண்பர் சொன்னார், "ஜீ சிறைப்படுத்தப்பட்டிருக்கிறாள்" என்று. சிறைப்படுத்தப்பட்டிருக்கும் இடத்தில் சென்று பார்ப்பதற்கு விரும்பினாலும் அதனால் இருவருக்கும் உண்டாகக் கூடிய நெருக்கடிகளால் அதைத் தவிர்த்திருந்தேன். ஆனால், அப்படிக் காணாமல் விடுவது மிகக் கடினமாகவே இருந்தது.

விடுவிக்கப்பட்ட பிறகு அவளைப் பார்க்கச் சென்றேன். அவளைக் கண்டபோது பெரிய மகிழ்ச்சியாகவும் ஆறுதலாகவுமிருந்தது. ஆனாலும் கட்டுப்படுத்த முடியாது கண்கள் தளும்பின. உக்கியதைப்போலிருந்தன அத்தனை எலும்புகளும். தளும்பிய தன் கண்களைக் கட்டுப்படுத்த முடியாமலும் காட்டிக் கொள்ள முடியாமலும் முகம் திருப்பி வேறெங்கோ பார்த்தாள் ஜீ. பிறகு குனிந்து நிலத்தைப் பார்த்தாள். முகத்தில் ஏராளம் உணர்ச்சிகள்.

இவளுக்குத்தான் எத்தனை பாடுகள் என்று நினைக்கத் துக்கம் மூடியது.

வரவேற்றவள், அமரச் சொல்லிவிட்டு, உள்ளே சென்று அறைக்குள்ளிருந்து ஓவியமொன்றை எடுத்து வந்து தந்தாள். அது சிலுவைப்பாட்டு ஓவியம். முள்முடி தரித்த கிறிஸ்துவின் தலையிலிருந்தும் உடலிலிருந்தும் ரத்தம் கொட்டிக்கிடந்தது. கூர்ந்து கவனித்தேன். அதில் உள்ளது கிறிஸ்துவல்ல. ஜீயே சிலுவையிலறையப்பட்டிருக்கிறாள். அவளிலிருந்தே இரத்தம் வடிந்து கொண்டிருக்கிறது. அவளுடைய ஆன்மா உருகிக் கரைந்து கொண்டிருக்கிறது. ஆண்டவரே... ஆண்டவரே...

தன்னுடைய சிறகுகள் அறுக்கப்பட்டிருந்த நிலையிலிருந்துதான் இந்த ஓவியத்தை வரைந்திருந்தாள் ஜீ. தன்னை வெளிப்படுத்துவதற்கு இதைவிட அவளுக்கு வேறு வழியுமில்லை, மொழியுமில்லை என்று பட்டது. இதைவிட யுத்தக் கைதிகளுக்கு வேறென்னதான் விதியுண்டு? விடுதலையின் எதிர்ப் பக்கம் சிறையும் சிதைவும்தானா?

அவளுடைய சிறைப்பாடுகளைக் கண்டு விம்மியது மனம். நெருப்பிலே கிடத்தப்பட்டேன் நான்.

"முட்படுக்கையின் மீது படுத்திருப்பவள் கலங்கவில்லை. நீ எதற்காகக் கலங்குகிறாய்?" என்றாள்.

எதையும் சொல்ல முடியாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

"எல்லாப் பாதைகளும் முள்ளாகி விட்டன" என்றபோது அவள் உதடுகள் ஒரு போதுமே இல்லாதளவுக்குக் உலர்ந்து போயிருந்தன. அந்த வார்த்தைகள் இந்த உலகத்தைத் துயரத்தால் மூடுவதைப்போலிருந்தது.

அப்போதும் நான் எந்தப் பதிலையும் சொல்லவில்லை. எதைத்தான் சொல்ல முடியும்?

தலையை நிமிர்த்தித் தோள்களைக் குலுக்கினாள். இரண்டு கைகளையும் மேல் நோக்கி விரித்து, "இற்ஸ் ஓகே" என்றபடி எழுந்து சென்றாள் முன் வாசலுக்கு. அப்படியே நிமிர்ந்து எதிர்ப்படும் வானத்தை, வெளியை வெறித்தாள். வெளியே ஒளியேறிய வெயில் தென்னைகளில் பட்டுத் தெறித்து முற்றத்தில் கோலமிழைத்தது.

நான் அந்த ஓவியத்திலிருந்து மீள முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தேன்.

இதெல்லாம் நடந்து மூன்றாவது வாரம், அவளுடைய திருமணத்தைப் பற்றிப் பேசவேண்டும் எனச் சென்றேன். அதற்கு முதல்நாள் மழை பெய்திருந்தது. செடிகளெல்லாம் சிலிர்த்துப் பொலிந்திருந்தன. நான் போயிருந்தபோது தென்னைகளில் தங்களுக்குள் பராக்குப் பண்ணிக்கொண்டிந்தன இரண்டு மைனாக்கள். வீட்டில் அவளுடைய தம்பி மட்டுமிருந்தான்.

நீண்ட காலத்துக்குப் பிறகு அன்று பொலிந்திருந்தாள். உற்சாகத்தோடிருந்தேன் நானும். ஆயினும் அவளுடைய கண்களைப் பார்த்துக்கொண்டு திருமணப் பேச்சை எப்படி ஆரம்பிப்பதென்று தெரியாமல் ஒரு கணம்

தடுமாறினேன். அவளோ எதையும் எதிர்கொள்ளத் தயாரானவள் போலிருந்தாள். உண்மைதான், அவள் காணாத போர்க்களமா? சிறைக்கூடமா? சவால் திடல்களா?

நான் பேச்சை ஆரம்பிக்க முன், இடது காலைக் காண்பித்து, "முழங்காலின் பின்பக்கமாகவுள்ள நரம்பில் வலிக்குது" என்றாள்.

"ஏன், என்னாச்சு?" என்று கேட்டேன்.

"யுத்தக் காயம். உள்ளே எறிகணைச் சிதறல்களிருக்கு" என்று ஜீ சொன்னபோது வலியுணர்ந்த முகத்தில் வாட்டம் தெரிந்தது.

உதட்டைக் கடித்துக்கொண்டு என்ன செய்வது என்று யோசித்தேன். இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் உடனே என்ன செய்வதென்று தெரிவதில்லை எனக்கு.

"முதலில் காலைச் சரியாக்கலாம். அதுக்குப்பிறகு மற்றதையெல்லாம் பார்க்கலாம்" என்றாள்.

"அது பிரச்சினையில்லை. அதைச் செய்யலாம். அதற்கு முன் உனக்காகவேண்டிய மற்ற விசயங்களைப் பற்றிப் பார்க்கலாம்" என்றேன்.

"சிலவேளை நடக்கவே முடியாதென்றாகி விட்டால்..." எனச் சிரித்துக்கொண்டு மிகச் சாதாரணமாகச் சொன்னாள் ஜீ. ஆனால், அவளுடைய கேள்வியை மிகச் சாதாரணமாக எடுத்துக்கொள்ள முடியவில்லை. அவளோ ஒரு குழந்தையைப்போல எதையும் சீரியஸாக எடுக்காமல் தன்னுடைய துயரங்களைக் கடக்க முயன்று கொண்டிருந்தாள்.

"இப்படியே ஒவ்வொன்றுக்கும் காரணங்களைச் சொல்லிக் கொண்டிருந்தால் சரியா?"

"எது அவசியமாகச் செய்ய வேண்டியுள்ளதோ அதைத்தானே செய்ய வேணும்" என்றாள்.

ஒவ்வொன்றுக்கும் நியாயங்களை அல்லது காரணங்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆனால், அவை எல்லாமே புறக்கணிக்க முடியாத காரணங்களாக, நியாயங்களாக இருந்தன.

இதற்குப்பிறகு ஊடகப் பயிற்சியொன்றுக்குச் செல்லும் வாய்ப்பு கிடைத்தது. "போட்டோ ஜெர்னலிஸம் தெரிந்தவர்கள் அல்லது அதில ஈடுபட விரும்புகிறவர்கள் யாராவது இருந்தால் சொல்லு. அவர்களை இந்த வேக்ஸொப்புக்குக் கூட்டிக்கொண்டு போகலாம்" என்று கேட்டான் பரம்.

இதுக்கு ஜீ பொருத்தமாக இருப்பாள். அவளுக்கு இது ஒரு மாறுதலாக இருக்கும் என்று தோன்றியது. உடனே ஜீயைத் தொலைபேசியில் அழைத்து விவரம் சொன்னேன். முதலில் ஆர்வம் காட்டவில்லை அவள். கொஞ்சம் வற்புறுத்திச் சொன்னதால், "எங்க நடக்குது? எப்ப போகணும்? யார் இந்த வேக்ஸொப்பை நடத்துகிறார்கள்? யாரால்லாம் வருகினம்? என்னமாதிரியான பயன் கிடைக்கும்" எனச் சில விளக்கங்களைக் கேட்டாள். விவரம் சொன்னேன்.

பயிற்சி நாளன்று காலையில் நானும் பரமும் அவளை அழைத்துச்செல்வதற்காகப்போயிருந்தோம். பரம் வண்டியிலிருந்தான். நான் மட்டும் ஜீயிடம் சென்றேன். அங்கே புறப்பட்டு வருவதற்கான எந்த ஆயத்தமும் இல்லாமலிருந்தாள் ஜீ. "நேரம் ஆகிவிட்டதல்லவா ஜீ, புறப்படவில்லையா?" என்று கேட்டேன்.

"வரலாம் எண்டுதானிருந்தன். ஆனால், இப்ப வேண்டாம் போலிருக்கு" என்றாள் ஜீ. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அவள் புரிந்துகொள்ள முடியாத புதிராக மாறிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது.

ஏற்கனவே தெரிவு செய்யப்பட்டவர்களின் விவரத்தைப் பயிற்சிக்காகக் கொடுத்திருந்தோம். காலையில்கூட பங்கேற்பாளர்களை உறுதிப்படுத்துவதற்காகக் கேட்டிருந்தார்கள். இப்பொழுது வரமுடியாது என்றால் என்ன சொல்வார்கள்? வேறு யாருக்காவது அந்த இடத்தைக் கொடுத்திருக்கலாமே எனக் குறைப்படக் கூடும்.

எதையும் பேசாமல் அங்கிருந்து புறப்பட்டேன். தனக்குப் பதிலாக, "சியா வாறாள். அவளுக்கும் போட்டோ ஜெர்னலிசத்தில ஈடுபாடிருக்கு. உங்களுக்கென்ன தலைகள்தானே தேவை. இன்னார்தான் வேணும் எண்டென்ன கட்டாயமிருக்கா?" என்று ஒரு பெண்ணை அனுப்பி வைத்தாள்.

அந்தப் பெண்ணை ஏற்கனவே அறிந்திருக்கிறேன். அவள் தொலைக்காட்சியொன்றில் வேலை செய்த போது சற்று அறிமுகம். இதற்குமேல் எதையும் பேசவில்லை. அங்கிருந்து புறப்பட்டுச் சென்று விட்டோம். ஆனால், ஜீ அப்படித் திடீரென்று தன்னுடைய முடிவை மாற்றியது குழப்பமாகவே இருந்தது. ஏன் அப்படிச் செய்தாள்? இதற்காக அவள் வருத்தம்கூடத் தெரிவிக்காமலிருந்தது ஏமாற்றமளித்தது.

என்ன காரணம்? என்ன காரணம்? என்று மனம் கேட்டுக்கொண்டேயிருந்தது. ஆனாலும் அதைப்பற்றிக் கேட்பதில்லை, அவளாகவே சொல்லட்டும் என்று விட்டு விட்டேன்.

பயிற்சி நடந்த இரண்டு நாட்களும் அவள் வந்திருந்தால் எவ்வளவோ பயனாக இருந்திருக்கும் என்று நினைத்தேன். இடையில் அவளுடன் இதைப்

பற்றிப் பேசலாமா என்று மனம் உந்தியது. ஆனாலும் அவள் அழைத்துப் பேசும்வரையில் நானாகப் பேசுவதில்லை என்று பிடிவாதமாயிருந்தேன். அவள் அழைக்கவேயில்லை.

இதெல்லாம் நடந்து ஆறு மாதங்களின் பின், அதிரடியாக மூன்று முக்கியமான தீர்மானங்களை எடுத்திருந்தாள் ஜீ. நாட்டை விட்டு வெளியேறுவது, திருமணம் செய்துகொள்வது, காலில் அறுவைச் சிகிச்சை செய்வது. இந்த மூன்று தீர்மானங்களையும் அவள் தனியாகத்தான் எடுத்திருக்கிறாள் என்றே நம்புகிறேன்.

இதிலெல்லாம் ஏனோ என்னைச் சம்மந்தப்படுத்தவேயில்லை. இதைத் திட்டமிட்டுச் செய்தாளா? இல்லையா என்றெல்லாம் தெரியாது.

அவளுடைய இந்த மூன்று முக்கியமான தீர்மானங்களைப் பற்றியும் ஒருநாள் யாரோ பேசுவதாகக் கனவில் கேட்டேன். பதறிப்போய் எழுந்து படுக்கையில் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தேன். இந்த மூன்று தீர்மானங்களும் அவளைச் சுற்றி வளைத்ததைப்போல ஒரு பிரம்மை சூழ்ந்தது.

அதற்குப் பிறகுதான் அவளுக்குக் கடிதம் எழுதினேன். கிழித்து வீசப்பட்ட அந்தக் கடித்திலிருந்து சிலவார்த்தைகள் எதனாலும் அழிக்க முடியாதிருந்தன. அவை கீழ்க்கண்டவாறு அமைந்தன.

‘..நமது காலம் என்பதென்ன ஜீ? அதிலே விளைந்த உறவுக்கென்ன பொருள்? நமக்கிடையில் ஆழமான நெருக்கமுண்டு. ஆனாலும் அந்த நெருக்கம் எந்தளவுக்கானது, எப்படியானது என்று அறிந்து வைத்திருக்கிறோமா ஜீ? நமக்கிடையில் நெருக்கமுள்ள அளவுக்குத் தூரமும் உண்டு. அதனால்தான் பல சந்தர்ப்பங்களிலும் தொலைவில் இருப்பதைப்போலவே தடுமாறிக் கொண்டிருக்கிறோம். நிச்சயமாக நமக்கிடையிலான நெருக்கத்துக்குச் சமாந்தரமாக ஒரு தூரமும் உண்டு என்கிறேன். அந்தத் தூரம் எவ்வளவு என்று இருவருக்குமே தெரியாது. ஆனால், அது ஒரு தூரம்தான். அதைக் குறைப்பதற்கு ஏன் நாங்கள் முயற்சிக்கவில்லை என்று எப்போதாவது நினைத்திருக்கிறாயா? அல்லது இந்தத் தூரம் எதற்காக என்று யோசித்ததுண்டா நீ? அப்படியொரு இடைவெளியை அல்லது தூரத்தை நாமிருவரும் சேர்ந்தே பராமரித்துக் கொண்டிருக்கிறோம் என்பது உண்மை. நீ மட்டுமல்ல, நானும் இதில் சேர்த்தியே. அது இடைவெளிதான் என்று சரியாகச் சொல்ல முடியாவிட்டாலும்.

அப்படிச் சொன்னாலும் அதை நீயும் ஏற்றுக் கொள்ளப்போவதில்லை. நானும் ஏற்கமாட்டேன். ஏனென்றால், உண்மையில் அது இடைவெளியே அல்ல. அதேபோல ஒன்று. அப்படியென்றால் நெருக்கத்திலிருக்கும் அளவைப்போல தூரத்திலும் ஒரு அளவுண்டு எனலாமா? நிச்சயமாக அப்படி இருக்கலாம்.

ஆனால், இடைவெளியைப்போல ஒன்றென்று சொன்னால் அது இடைவெளியாகி விடும் என்று நீ சொல்வாய். ஆகவே அப்படிச் சொல்லக் கூடாது. நமக்கிடையில் இடைவெளி இருக்கிறதா என்ன? இல்லவே இல்லை. நமக்கிடையில் நெருக்கமே உண்டு. அதேயளவுக்கு தூரமும் உண்டு. இது மறுக்க முடியாத உண்மை. இந்தத் தூரத்தை யார் பராமரித்துக் கொண்டிருப்பது என்று தெரியவில்லை. சரியாகச் சொன்னால் இருவரும்தான் இதைப் பராமரித்துக் கொண்டிருக்கிறோம்.

இந்த நிலையானது நம்மால் செயற்கையாகவே பராமரிக்கப்படுகிறதா? என்பதே என்னுடைய சந்தேகம். அது உண்மையாக இருந்தால் சந்தேகமேயில்லை, இது ஒரு நாடகமே. எதற்காக இந்த நாடகம்? தேவையற்ற நாடகம் இது என்று புரியவில்லையா? அல்லது இது அவசியம்தான். தேவைதான் என்று எண்ணுகிறாயா?

இதனால் நம்முடைய நாட்கள் எந்தப் பயனையும் விளைக்காமல் வீணாகியதல்லவா! இனியும் அப்படி வீணாகத்தான் வேணுமா? இதைக் கடந்து செல்லவே முடியாதா? அப்படிக் கடந்து செல்வதென்றால் அடுத்தது என்ன? அதைப்பற்றி என்றாவது நீ நினைத்ததுண்டா?

உன்னுடைய நினைவுக்குறிப்புகளை மீளப்புரட்டிப் பார்க்க வேண்டுகிறேன் ஜீ. எதையும் மறவாமல் எல்லாவற்றையும் பத்திரமாக அடுக்கி, நினைவுகளின் சேகரமாகவே உன்னை வைத்திருப்பவளல்லவா நீ! அப்படி அவற்றைப் புரட்டிப் பார்க்கும்பொழுது எதையெல்லாம் நீ காண்கிறாயோ அவற்றைப் பற்றி என்னோடு பேசு. அது நமக்குப் புதிய வெளிச்சங்களையும் புதிய பாதைகளையும் திறக்கும். இது நிச்சயம். ஆனால், வழமையைப்போல இதிலும் உனக்குக் குழப்பங்களும் தயக்கமும் இருக்கக் கூடும். அதைக் கடந்து வா. ஆனால், அப்படி நான் உத்தரவிடவோ கட்டளையிடவோ முடியாது. அது ஒரு வகையில் உன்னை நிர்ப்பந்திப்பதாகவோ குற்றம் சாட்டுவதைப்போலவோ ஆகி விடலாம். இப்படி நினைத்து நினைத்தே எத்தனையோ படிகளில் இறங்கிவிட்டேன். நமக்கிடையலான சமநிலைக் குலைவுகள் இப்படி ஏற்பட்டதுண்டு என்பது என்னுடைய அனுமானம். இதையும் கூட நீ எப்படி எடுத்துக்கொள்ளப்போகிறாய் என்றெனக்குத் தெரியவில்லை.

என்னுடைய ஞாபகங்களில் படிந்திருந்த தூசியை விலக்கி எத்தனையோ ஞாபகங்களை ஒளிர விட்டிருக்கிறாய். ஆச்சரியங்கள்



எப்படியெல்லாமிருக்கும் என்ற வியப்பை ஊட்டின அவை. நீ நினைவூட்டியதற்குப் பிறகே நம்முடைய முதல்நாளின் குளிர்மையைக்கூட உணர்ந்தேன். அதற்குப் பிறகான ஒவ்வொரு சந்திப்பையும் உரையாடல்களையும் கூட அப்படியே புதிய விதைகளைப்போல வைத்திருந்தாய்.

கடந்த வாரத்தில் ஒரு நாள் இதையெல்லாம் நீ நினைவெடுத்தபோது என்னில் சிறகுகள் முளைத்தன. கடந்த காலத்திடம் மீளச் செல்வதற்கு நினைவின் சிறகுகள் அற்புதமானவை. அந்தச் சிறகுகளால் எதிர்காலத்துக்கும் பறக்க முடியுமா என்று யோசிக்கிறேன். சாத்தியமென்றால் அதற்கான பிரயத்தனத்தை எடுக்கலாம். ஆனால், அது வெறும் கனவாக மிஞ்சி விடக்கூடாது. கனவுகளின் பின்னே அலைவதை அதிகமும் நான் விரும்புவதில்லை. ஆனால், கனவுகளில்தான் உனக்கும் எனக்குமான நெருக்கத்தை அதிகமாக உணர்ந்திருக்கிறேன். நேரிலே கிட்டாத நெருக்கமும் பரிவும் அந்தக் கனவுகளில் மீந்திருக்கிறது ஜீ. இது எப்படி என்பது ஆச்சரியமே. இதைப்பற்றிப் பல தடவை யோசித்திருக்கிறேன்.....

இதற்கப்பால் அதிலே என்ன இருந்தது என்று தெரியாது. நினைவிலுமில்லை.'

"ஜீயினுடைய காலின் அறுவைச் சிகிச்சை முடிந்து விட்டது. ஆனால், மூன்று ஆண்டுகளாக அவளால் சரியாக நடக்க முடியவில்லை. நடக்கும் பயிற்சிகளில் ஆர்வத்தோடு ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாள். நாட்டை விட்டு வெளியேறியிருந்தாலும் இன்னும் நாட்டைப் பற்றியே தீவிரமாக யோசித்துக்கொண்டிருக்கிறாள். அவளால் அதிலிருந்து மீள முடியவில்லை. சிதைக்கப்பட்ட நாட்களைப் பற்றியும் நாட்டைப் பற்றியுமான அடையாளங்களைச் சேகரித்து வடிவமைக்க முயற்சிக்கிறாள். இதைவிட அவள் ஊரிலேயே இருந்து இதைச் செய்திருக்கலாம்.

'அவளுடைய மூன்றாவது தீர்மானம் அவளைத் திருப்பி வைத்திருக்கிறது எதிர்வளமாக' என்றொரு குறுஞ்செய்தியை அனுப்பியிருந்தான் பூவன்.

எல்லாவற்றையும் கிழித்தெறிந்து விட்டு, மறுபடி புதிதாக எழுதத் தொடங்கியிருந்தேன் அவளுக்கான குறிப்புகளை. ●

கருணாகரன் <poompoom2007@gmail.com>

## எட்வர்ட் ஆல்பி

# சண்டைக்கார, ஆர்ப்பரிக்கிற, கோபக்கார, திறமைசாலியான (இன்னும் வேறென்ன வேண்டும்!) அமெரிக்க நாடகாசிரியர்

**ஸிந்துஜா**

"நான் ஒரு ஐரோப்பிய நாடக ஆசிரியன்தான் போலும்! பிராட்வேயில் நாடகம் நடத்தாத நாடக ஆசிரியர்கள் யார் யார் என்று பாருங்கள்: ஷேக்ஸ்பியர், மார்லோ, மோலியர், இப்சன், செக்காவ், பெக்கெட், ஜெனே! இவர்களில் ஒருவர் கூட பிராட்வே பக்கம் வரவில்லை!"

- 1991ல் அளித்த ஒரு நேர்காணலில் ஆல்பி.

எட்வர்ட் ஆல்பியின் உலகப்புகழ்பெற்ற நாடகமான 'வர்ஜினியா உல்ஃபைக் கண்டு யாருக்குப் பயம்?' வெளிவந்த போது 'நியூயார்க் டைம்ஸ்' அவரை, 'நம்பிக்கை இழந்த ஒரு தலைமுறையின் நாடக ஆசிரியர்' என்று வருணித்தது. அதற்குப் பின் உலகப் பிரசித்திப் பெற்ற பிராட்வே தியேட்டரில் அந்நாடகம் தொடர்ந்து பத்தொன்பது மாதங்கள் ஓடி பெரும் கவனத்தைப் பெற்றது.

அது ஒரு மூன்று மணி நேர மூவரங்க நாடகம். கெட்ட வார்த்தைகள், தொடர்ந்து மது அருந்துதல், பாலுறவு வர்ணனைகள் ஆகியவற்றில் அமிழ்ந்தெடுத்த இந்த நாடகத்தில் கல்லூரியில் வேலை பார்க்கும் நடுத்தர வயதினான ஜார்ஜும் அவன் மனைவி மார்த்தாவும் அவர்களது வாழ்க்கையில் ஒருவரை ஒருவர் வார்த்தைகளால் கடித்துக் குதறிக் கொண்டும் (அநியாயத்துக்குக் கெட்ட வார்த்தைகள்!) ஒருவரைப் பற்றி மற்றவர் தெரிந்துகொண்ட ரகசியங்களை வெளியில் சொல்லி அவமானப்படுத்தியும் நடமாடுகிறார்கள்.



ஜார்ஜும் மார்த்தாவும் குடித்துவிட்டு ஒரு பார்ட்டியில் இருந்து தங்கள் வீட்டுக்கு வருகிறார்கள். ஜார்ஜின் உடன் வேலை பார்க்கும் நிக் என்பவனும் அவனது மனைவியும் ஜார்ஜின் வீட்டுக்கு வருகிறார்கள். சற்று நேரத்துக்குப் பின் நால்வருக்குமிடையே கருத்து மோதல்களால் வார்த்தை யுத்தம் நடை பெறுகிறது. இரண்டு ஜோடிகளும் அவரவர் துன்பங்கள், எதிர்கொண்ட நம்பிக்கைத் துரோகங்கள், அடிபணிய வைக்க மற்றவர்கள் செலுத்திய ஆதிக்கங்கள் பற்றி ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டு நடமாடுகிறார்கள். நால்வரும் தங்கள் வாழ்வின் ரகசியங்களைப் பொது வெளியில் போட்டு உடைக்கிறார்கள். அப்போது குழந்தைப் பாக்கியம் இல்லாத ஜார்ஜ் தன்னுடைய 'கற்பனை'க் குழந்தையைக் கொல்லப் போவதாக அறிவிக்கிறான். இறுதியில் மோதல்கள் முடிந்து ஜார்ஜும் மார்த்தாவும் தத்தம் வருத்தங்களைப் பங்கீட்டுக்கொள்ளும் ஜோடியாய் நின்று உலகைப் பார்க்கிறார்கள்.

இந்த நாடகத்திற்குக் கண்டனங்களும் புகழ்மாலைகளும் ஒரு சேர வந்தன. "நமது வாழ்க்கையைத் திரைகளற்று வாழ்வது எப்படி?" என்பதைத்தான் தான் சொல்ல முயன்றதாக ஆல்பி கூறினார். புகழ் பெற்ற அமெரிக்கத் திரைப்பட விமரிசகரான ஸ்டான்லி காஃப்மன், "சென்ற பத்தாண்டின் தலைசிறந்த நாடகம்; சமரசமில்லாது வாழ்க்கையின் போலித்தனங்களை உரித்துக்காட்டியிருக்கிறார் ஆல்பி" என்று



புகழ்ந்தார்.

சிலரை அதிர்ச்சிக்கும் பலரை வியப்பிற்கும் இட்டுச் சென்ற இந்நாடகம் புதிய அமெரிக்க நாடக எழுத்தின் வரைமுறைகளை எழுப்பியது. நாடகத்தின் கூர்மையான வசனங்கள் பார்வையாளர்களின் வரவேற்பைப் பெற்றன. மதுவின் கிறக்கத்தில் மார்த்தா கூறுவதைக் கேளுங்கள்:

> நானும் ஜார்ஜும் எப்போதும் எங்களுக்குள் கதறி அழுது கொண்டே இருக்கிறோம். என்ன செய்வது? நாங்கள் கதறுகிறோம். எங்கள் கண்ணீர் முத்துக்களைச் சேகரிக்கிறோம். ஐஸ் டிரேயில் அவற்றைப் போட்டு ஐஸ் பாக்சில் வைக்கிறோம். அவை கட்டி தட்டியதும் எங்களின் மதுக் குவளைகளில் போட்டு அருந்துகிறோம்!

அமெரிக்காவின் - குறிப்பாக மணமான அமெரிக்கர்களின் - பண்பற்ற வாழ்க்கை முறைகளைத் தன் கூர்மையான பார்வையாலும் எழுத்தாலும் ஆல்பி அவதானித்தார். இந்நாடகம் திரைப்படமாக வந்தது. படத்தில் நாடக அங்கத்தினர்களைப் போலத் தம் குடும்ப வாழ்வில் பூசல்கள் கொண்ட ரிச்சர்ட் பர்ட்டனும் எலிசபெத் டெய்லரும் கதாநாயகனாகவும் கதாநாயகியாகவும் நடித்தார்கள்! இப்படம் வெளியாவதற்கு முன் சென்சார் அனுமதி கிடைக்கப் போராட்டம் நடத்த வேண்டியிருந்தது. ஆனால், பின்னாளில் இப்படத்தில் நடித்ததற்காக எலிசபெத் டெய்லருக்கு ஆஸ்கர் விருது கிடைத்தது.

ஆல்பிக்குப் பெயரையும் புகழையும் இந்நாடகம் அள்ளித் தந்தாலும் அவர் அதைப் பற்றிக் குறிப்பிடுகையில், "என் கழுத்தைச் சுற்றிய ஆபரணமாக இது மிளிர்ந்தாலும் இதன் பளு தாங்க முடியாததாக இருக்கிறது" என்றார்.

புலிட்சர் விருதுக்கு தேர்வுக் குழு அங்கத்தினர்கள் இந்நாடகத்தைப் பரிந்துரைத்தார்கள். ஆனால், தேர்வுக் கமிட்டியில் உள்ள கொலம்பியா பல்கலைக் கழகம், "இந்த நாடகம் அமெரிக்க வாழ்க்கையின் முழுமையைத் தரத் தவறிவிட்டது" என்று கூறி விருது தர மறுத்துவிட்டது. குடும்பத்தின் குலைவை, மெருகை அல்ல, நாடகம் வெளிச்சம் போட்டுக் காட்டுவதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று கூறப்பட்டது.

அவ்வருடம் வேறெந்த நாடகமும் விருதுக்குத் தகுதியாக இடம் பெறவில்லை. கமிட்டியின் செயலை

எதிர்த்துதேர்வுக் குழுவில் இருந்த பாதிக்கு மேற்பட்ட அங்கத்தினர்கள் பதவி விலகினார்கள். நான்கு பத்தாண்டுகள் கழித்து,ஏன் இன்றும் கூட,இந்நாடகம் அமெரிக்க நாடக சரித்திரத்தில் ஓர் மைல்கல் என்று கொண்டாடப்படுகிறது.

'வர்ஜீனியா' நாடகத்துக்குப் புலிட்சர் விருது மறுக்கப்பட்டாலும் அதன் பிறகு. 'நுண்ணிய சமநிலை', 'கடற்காட்சி', 'மூன்று உயரமான பெண்கள்' ஆகிய மூன்று நாடகங்களுக்கும் அவருக்குப் புலிட்சர் விருது கிடைத்தது. ஆல்பி, உலகின் தலைசிறந்த நாடக ஆசிரியர்களான யூஜின் ஓநீல், டென்னஸி வில்லியம்ஸ், ஆர்தர் மில்லர் ஆகியோரின் வாரிசாகக் கருதப்பட்டார்.

இத்தகைய வியக்தியின் பின்புலம் எவ்வாறு இருந்தது?

ஆல்பி பிறந்த இரு வாரத்துக்குள் அவரை அமெரிக்காவின் தியேட்டர் சங்கிலி என்று விளங்கிய கீத் ஆல்பி நிறுவனத்தின் சொந்தக்காரர் ரீட் ஆல்பி தத்துஎடுத்துக்கொண்டார்.கீத்ஆல்பிபத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து நாடு முழுவதும் தியேட்டர்களை உருவாக்கி நிர்வகித்தது. அவர்களின் நாடகக் குழுக்கள் ஊர் ஊராகச் சுற்றி மக்களிடையே நாடகம் நடத்தும் இயக்கத்தை வளர்த்தது. பின்னாட்களில் இந்நிறுவனம் திரைத்துறையிலும் கால் வைத்தது. இப்பின்னணியில் ஆல்பிக்கு இளமைக்காலம் தொட்டே நாடகங்களின் தொடர்பு உண்டாயிற்று. ஆனால், கலை மீது அவருக்கு ஏற்பட்ட காதலை அவரது வளர்ப்புப் பெற்றோர் ஆதரிக்கவில்லை. "அவர்கள் என்னை ஒரு கார்ப்பரேட் கொள்ளைக்காரனாக ஆக்க விரும்பினார்கள்!" என்றார் ஆல்பி. இதனால் அவருக்கு ஆரம்பம் முதலே அவர்கள் மீது ஈடுபாடு ஏற்படவில்லை.

ஆல்பியின் படிப்பு விவகாரமும் சுமுகமாக இருக்கவில்லை. ஒழுங்காக அவர் வகுப்புக்கு வருவதில்லை என்று இரண்டு பள்ளிகளிலிருந்து அவர் நீக்கப்பட்டார். பட்டப்படிப்பின் போது பாதியிலேயே வகுப்புகளுக்குச் செல்லுவதை நிறுத்திவிட்டார். இருபதாவது வயதில் குடும்பத்தை விட்டு வெளியேறினார். அவரது வளர்ப்புத் தந்தையை சாகும் வரை அவர் பார்க்கவில்லை. வளர்ப்புத் தாயையும் 17 வருடங்கள் கழித்துப் பார்த்தார். இருவரிடமும் அவர் சகஜமான உறவு கொண்டிருக்கவில்லை. அக் குடும்பத்தில் இருந்த வரை தனக்கு எப்போதும் ஓர் அறையில் அடைக்கப்பட்டு மூச்சுத் திணறும் உணர்வே இருந்தது என்று ஒருமுறை கூறினார்.

இதற்குப் பின் வந்த பத்து வருஷங்களை அவர் தனது வளர்ப்புப் பாட்டனார் கொடுத்த ஓர் சிறிய சொத்தை வைத்தும் சில இடங்களில் வேலை பார்த்து சம்பாதித்தும் வாழ்க்கையை ஓட்டினார். 1950களில் மன்ஹாட்டனில் நிலவிய கலை இலக்கியச் சூழ்நிலை அறிமுகப்படுத்திய பல்வேறு நுணுக்கங்கள் - இசை, தியேட்டர், திரை, இலக்கியம், ஓவியம் சார்ந்தவை - அவருள் கிளர்ச்சியை ஏற்படுத்தின. பலவித சோதனை முயற்சிகளுக்குப் பிறகு நாடகமே தனது இயங்கு தளம் என்று கண்டுகொண்டார்.

'மிருகக்காட்சி சாலையின் கதை' என்னும் அவரது முதல் நாடகம் பெர்லினில் அவரது முப்பதாவது வயதில் அரங்கேறியது. அதற்கு அடுத்த வருடம் அது பிராட்வேயில் நடைபெற்றது.

அரட்டையில் ஈடுபாடு உள்ள ஓர் மனிதன், பூங்காவில் உட்கார்ந்திருக்கும் போது அங்கு வந்த ஒருவரிடம் பேச்சுக் கொடுத்து, இறுதியில் அவனை வன்முறையில் ஈடுபடச் செய்கிறான். இதற்காக, மனிதனின் அந்நியமாதலை இரக்கமோ பயமோ இன்றி வெளிப்படுத்தியவர் என்று உலக அரங்கில் ஆல்பி புகழப்பட்டார். அமெரிக்க நாடக உலகில் அபத்த நாடகத்தைக் கொண்டு வரும் முயற்சியாக இது கருதப்பட்டது பிரசித்துப் பெற்ற எழுத்தாளர் நார்மன் மெய்லர் இது துணிச்சலான முயற்சி என்று பாராட்டினார்.

அமெரிக்கக் கனவின் விரக்தியான உள்கட்டு வித்தியாசமானது. சுயபச்சாதாபம், அறிவுசார் இயங்குதலைக் கலைத்துப் போடுவது ஆகிய இரண்டு செயல்களும் மனிதரிடையே எவ்வளவு நெருக்கமான உறவுகளை ஏற்படுத்தி விடுகின்றன என்பதை ஆல்பியின் நாடகங்கள் கவனத்தில் கொண்டன. மனித மனம் கொண்டுள்ள வக்கிரங்கள் வாய் வார்த்தைகளாக வெளிப்படுகையில் அவை கேட்பவர் மீது செலுத்தும் வன்முறையையும் அதிர்ச்சியையும் வலியையும் முதல் புலிட்சர் விருது (1967) பெற்ற 'நுண்ணிய சமநிலை' நாடகம் விவரிக்கிறது.

பணியிலிருந்து ஒய்வு பெற்ற கணவன், அவரது மனைவி இருவரும் ஒரு மாதிரியாகத் தங்கள் ஓய்வுக் காலத்தைக் கழிக்கிறார்கள். நான்காவது முறையாக விவாகரத்து பெற்ற அவர்களது பெண் அவர்களை வந்து அடைகிறாள். அந்த வீட்டில் வாய்த் துடுக்கு மிகுந்த மனைவியின் சகோதரியும் வசிக்கிறாள். பெண் வந்து சேரும் சமயம் அவள் பெற்றோரின் பழைய நண்பர்கள் வேறு - கணவனும் மனைவியும் - அங்கு வந்து தங்குகிறார்கள்.

இந்த நாடகம் மூன்று விதமான கருத்தோட்டங்களை உள்ளடக்கியிருக்கிறது. ஒன்று தடுமாற்றம். இது வாழ்க்கையின் இயல்பான கதியைப் பாதிக்கும் விஷயம். நாடகத்தில் வரும் மனைவி, தான்தான் குடும்பத்தைத் தங்குபவள் என்னும் ஆழ்ந்த நம்பிக்கையில் இயங்குகிறாள். ஆனால், குடும்பத்தில் உள்ள மற்றவர்களும் வெளியேயிருந்து வந்தவர்களும் அவ்வளவு எளிதாக அவள் கட்டுக்குள்



அடங்க மறுக்கிறார்கள். இது அவளை மிகவும் தடுமாற்றத்திற்கு உள்ளாக்குகிறது.

இரண்டாவதாகக் கற்பனையில் வாழும் சுகம். ஆல்பியின் நாடகப் பாத்திரங்கள் நிஜவாழ்வின் கடுமையான தருணங்களிலிருந்து தப்பி ஓட விழைபவர்கள். இந்த ஓட்டத்துக்கு அவர்களுக்குத் துணை புரிவது மது. ஒவ்வொரு காட்சியும் ஒவ்வொரு பாத்திரமும் மதுவின் பிடியில் சிக்கி இருப்பதை பார்க்கும்போது மதுவே நாடகத்தில் ஒரு பாத்திரமோ என்கிற சந்தேகத்தை உண்டாக்குகிறது!

மூன்றாவது அச்சம். வெளியிலிருந்து வரும் ஜோடி அவ்வாறு திடீரென வரக் காரணமென்ன? இருட்டுக்குப் பயந்து வந்துவிட்டதாகச் சொல்கிறார்கள். நாடகத்தில் வரும் மனைவி, “அதனால்தான் இரவில் நாம் எல்லோரும் தூங்கி விடுகிறோம்!' என்கிறாள். இருட்டு ஒருவிதமான வியாதி; அதை அவர்கள் இருவரும் தனது வீட்டுக்குள் கொண்டு வந்துவிட்டார்கள் என்று அவள் குற்றம் சாட்டுகிறாள்.

ஆண் - பெண் உறவுகளின் சிக்கல்களினால் ஏற்படும் பிரச்சினைகளையும் போராட்டங்களையும் சித்தரிக்கும் ‘கடற்காட்சி’ நாடகம் (1975) ஆல்பிக்கு இரண்டாவது புலிட்சர் விருதை வாங்கித் தந்தது. அதீதக் கற்பனை, நகைச்சுவை, அங்கதம் இவற்றோடு கலந்த அபத்த நாடகமாக இது வெளி வந்தது.

இந்த நாடகத்தில் ஓய்வு பெற்ற ஒரு கணவனும் அவரது மனைவியும் அவர்களின் பிணக்குகள் பற்றி விசாரம் கொண்டு அவற்றை எப்படித் தீர்ப்பது என்று விவாதிக்கக் கடற்கரைக்கு வருகிறார்கள். அங்கு அவர்கள் சந்திப்பது கடலிலிருந்து வெளிவரும் ஒரு ஆண் - பெண் மீன் ஜோடியை. மனிதர்களைப் போல அவை உயரமான உருவம் கொண்டிருக்கின்றன; அவைகள் நடந்துகொள்வதும் மனிதர்களைப் போல. அவை இரண்டும் மனித ஜோடியான கணவன் - மனைவியிடம் கடல் வாழ்க்கையில் தாங்கள் படும் துன்பம், சுவாரஸ்யமற்ற வாழ்க்கை ஆகியவற்றால் வெறுப்படைந்து கடலை விட்டு நிலத்துக்கு வர முடிவு எடுத்துள்ளதாய்க் கூறுகின்றன. இருஜோடிகளும் பேசி முடிக்கையில் மீன் ஜோடி நிலத்தில் வாழ்பவர்களுக்கு இவ்வளவு துன்பங்களா என்று கசப்புற்று மீண்டும் கடலுக்குள் செல்வதாகக் கூறுகின்றன. ஆனால், மனித ஜோடி அவைகளைத் தடுத்து நிலத்தில் வாழ அவர்களுக்கு வசதி செய்து தருவதாகக் கூறுவதால் அவை திரும்பிப் போகும் முடிவை மாற்றிக்கொள்கின்றன.

ஆல்பியின் இந்த நாடகம் வழக்கத்துக்கு விரோதமாக மகிழ்ச்சியான முடிவைக் கொண்டிருந்ததாகப் பார்வையாளர்கள் கூறினார்கள். விமர்சகர்களும் நாடகத்தை வரவேற்று அதன் மகிழ்ச்சியான முடிவுக்காக ஆல்பியைப் பாராட்டினார்கள்.

ஆனால், இதற்குப் பின் வந்த ஆல்பியின் நாடகங்கள் விமர்சகர்களின் கண்டனங்களைத் தங்கி வந்தன.




'மூன்று கை மனிதன்' என்னும் நாடகத்தை, 'ஆல்பியின் பைத்தியக்காரத்தனமான படைப்பு' என்று 'நியூயார்க் டைம்ஸ்' விமர்சகர் கிழிகிழியென்று கிழித்திருந்தார். ஆல்பியின் படைப்பு உலகம் இத்துடன் முடிவடைந்தது என்று பலரும் முடிவு கட்டினார்கள். அவர் ஐரோப்பாவில் நாடகத் தயாரிப்புகளுக்காக நேரத்தைச் செலவிட்டார். ஹூஸ்டன் பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகப் பணியாற்றி நாடக மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தார்.

ஆனால், 1990களில் அவர் வாழ்க்கையில் மகத்தான திருப்பம் ஏற்பட்டது. பிராட்வேக்கு வெளியே இயங்கிய சிக்னேச்சர் தியேட்டர் கம்பனி 1993-94 நாடகசீசனை ஆல்பியின் படைப்புகளுக்காக மட்டுமே ஒதுக்கித் தந்தது. அதே சமயம் வினேயர் தியேட்டர் கம்பனி அவரது 'மூன்று உயரமான பெண்கள்' நாடகத்தை வெளியிட்டது. மூன்றாவது புலிட்சர் விருதை இந்த நாடகம் ஆல்பிக்கு வாங்கித் தந்தது.

இந்த நாடகத்தில் ஒரு பெண்ணின் இளம் பருவம், நடுத்தர வயது, வயதானவள் என்ற கோலம் சித்தரிக்கப்படுகிறது. முதல் அங்கத்தில் வயதான பெண்மணியுடன், நடுத்தர வயது மாதுவும் இளம் பெண்ணும் கூட இருந்து நடத்திச் செல்லுகிறார்கள். இரண்டாம் அங்கத்தில் ரூபமாக வயதானவளும் மற்ற இருவரும் அரூபமாகவும் காட்சிப்படுத்தப் படுகிறார்கள். அவமானம், சந்தோஷம், வருத்தம், நிறைவு ஆகியவற்றால் சூழ்ந்திருந்த தன் வாழ்க்கையை ஒரு 90 வயது மூதாட்டி விவரிக்கிறாள். சிறுவயதில் அடைந்த சந்தோஷங்கள், யுவதியாய் உற்சாகமாய் வளைய வந்த நாள்கள், வாழ்க்கை அவளுக்குத் தந்த திருப்தி ஆகியவற்றின் நினைவுகளில் மூதாட்டி இளைப்பாறுகிறாள். அப்போது அவள் வாழ்க்கையில் அடைந்த துயரங்கள், வஞ்சிக்கப்பட்ட தருணங்கள் ஆகியவையும் அவளுக்கு நினைவுக்கு வருகின்றன. அவள் கணவனின் அடல்ட்ரி, ஓரினச் சேர்க்கையில் பிடிப்புக்கு கொண்டு வளைய வரும் ஒரே மகன் ஆகியோரைப் பற்றியும் பேசுகிறாள்.

அவளை பார்க்க மகன் வருகிறான். அவள் சொல்வதையெல்லாம் கேட்கிறான். ஆனால், ஒரு வார்த்தை கூடப் பேசாமல் கடைசியில் எழுந்து போகிறான். நாடகத்தில் வரும் தாய் - மகன் உறவு ஆல்பியின் சொந்த வாழ்க்கையோடு தொடர்புடையது என்று ஒரு கருத்து நிலவியது.

இதற்குப் பிறகு அவர் வெளியிட்ட நாடகங்கள் பெரும் வெற்றியை அடைந்தன. மற்றொரு புதிய நாடகமான 'ஆடு அல்லது சில்வியா யார்?' என்ற நாடகம் 2002ஆம் ஆண்டின் சிறந்த நாடகத்திற்கான டோனி விருதை வென்றது.

மகிழ்ச்சியான மணவாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கும் ஒரு கட்டிடக் கலைஞன் சில்வியா என்னும் ஆடுடன் உறவு வைத்துக்கொள்ளும் போது



டொராண்டோ பல்கலைக்கழகத்தில் மார்ச் 1971இல் பேசும் ஆல்பி. அவர் பேசுவதைக் கேட்க கூடியவர்கள்.

அவனது மண வாழ்க்கை எவ்வளவு பெரிய நரகமாக்கி விடுகிறது என்பதை நாடகம் சித்தரித்தது. இதை பற்றிக் குறிப்பிடுகையில், "ஒவ்வொரு நாகரீகமும் சமூகத்தின் மீது காரணமற்ற விதிகளைக் கொடூரமாகத் திணிக்கிறது. நினைத்துப் பார்க்க முடியாத ஓர் நிகழ்ச்சி எவ்வாறு குடும்ப வாழ்க்கையைச் சிதைக்கிறது. எவ்வாறு அந்தப் பிரச்சினைத் தீர்ப்பது என்று இந்த நாடகம் பரிசீலிக்கிறது. மக்கள் தாங்கள் கொண்டிருக்கும் வாழ்க்கையின் மீதான மதிப்புகள் உண்மையாகவே மதிப்பு மிக்கவைதானா என்று புதிதாக யோசிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்" என்றார் ஆல்பி.

"அதிர்ஷ்டம் இருந்தால், இந்த நாடகத்தின் பார்வையாளர்கள் நாடகம் நடக்கும் போது எழுந்து நின்று, கைக்குக் கிடைக்கும் பொருள்களை எல்லாம் எடுத்து நாடக மேடை மீது வீசுவார்கள் என்று நான் நம்புகிறேன்!" என்று அமெரிக்க நாடக ஆசிரியரும் பத்திரிகையாளருமான ஸ்டீவன் டிராக்மன்னுக்குத் தந்த நேர்காணலில் ஆல்பி குறிப்பிட்டார்!

பின் வந்த இந்த நாள்களில் அவரும் மிகவும் மாறிவிட்டார். எப்போதும் சுடுசொற்களை அள்ளித் தெளிப்பவராய் இருந்த அவர் அதையெல்லாம் குறைத்துவிட்டார். ஆரம்ப காலங்களில் அவரிடம் இருந்த முரட்டுப் பிடிவாதம் எவரையும் தள்ளி நின்றே அவருடன் பேச வைத்தது. அவரது மேதைமையும் திறமையும் அவருக்குத் தந்த முரட்டுத்தனமான காலம் போய் அவர் மென்மையான சுபாவம் கொண்டவராக மாறி விட்டார். காமிராவுக்கு முன்னால் நிற்கும் போது கூடப் புன்னகை செய்யாத முகத்துடன் காணப்படுவார் என்று அவருக்குப் பெயர் இருந்தது. தன் படைப்புகளின் மீது திருத்தமோ மாறுதலோ செய்ய அவர் யாரையும் அனுமதித்ததில்லை. எட்வர்ட் ஆல்பியின் நாடகத் தயாரிப்பு என்றால் அது எட்வர்ட் ஆல்பியின் ஆளுகையில் மட்டுமே என்று நிர்ணயித்திருந்தார். நாடகக் கொட்டகையின் கூடாரமாக இருக்கட்டும் அல்லது பதிப்பிக்கப்பட்ட நாடகப் பிரதியாக இருக்கட்டும் கொட்டை எழுத்தில் அவர் பெயர்தான் முதலாவதாக இருக்க வேண்டும் என்று கட்டளை இட்டார்.

"நான் என் படைப்புகளை மறு திருத்தமோ மறு பரிசீலனையோ செய்ய மாட்டேன். பெர்னார்ட் ஷா செய்தார், மற்றவர்களுக்கு எளிதில் புரிய வேண்டும் என்று. நான் இங்கிதமானவன்தான் - யாரும் என் வழியில் குறுக்கிடாதவரை!" என்றார்.

ஆல்பி தனக்குத் தோன்றும் நாடகக் கருத்துக்களைப் பல மாதங்கள், சில சமயம் பல வருடங்கள் மனதில் ஊறப் போட்டுக்கொண்டு ஒரு வரி கூட எழுதாமல் இருந்திருக்கிறார். எழுந்தவுடன் தோன்றிய மறு நிமிடம் பேப்பரைக் கையில் எடுத்த விடுவார். அவருடைய புகழ்பெற்ற 'வர்ஜினியா' நாடகத்தின் தலைப்பு ஒரு முறை க்ரீன்விச் வில்லேஜில் இருந்த பார் ஒன்றின்





ஆல்பி இல்லம்



கண்ணாடியில்,'வர்ஜினியாவைக் கண்டு பயப்படுவது யார்?' என்று எழுதப்பட்டிருந்ததிலிருந்து எடுத்துக் கொண்டதுதான். அவர் ஏன் தினப் பிரச்சினைகளை பற்றி - வியட்நாம் போர், இனப் போராட்டம், வாட்டர்கேட் ஊழல், அமெரிக்கா ஈடுபட்ட யுத்தங்கள், எய்ட்ஸ் வியாதி - எழுதவில்லை என்று கேட்கப்பட்ட போது, "இத்தகைய பிரச்சினைகள் எழுதப்பட்ட நாள்களின் கொண்டாட்டத்திற்கு மட்டும்தான்; காலம் கடந்து நிற்கும் எழுத்து என்பது மனிதர்களைப் பற்றியும் சமூகக் கொடுமைகளைப் பற்றியும் விசாரணை செய்யும் வல்லமை வாய்ந்தவை" என்றார்.

ஆல்பி, அவரது இளமைக் காலத்தில் ஓரினச் சேர்க்கையில் ஈடுபாடு கொண்டவராக இருந்தார். மதுவைப் போல ஓரினச் சேர்க்கையும் அவர் எழுத்தில் அடிக்கடி இடம்பெற்றது. பெண்களின் வலிமையைப் பற்றி அவர் தீர்மானமான முடிவுகளைக் கொண்டிருந்தார். "என் நாடகங்களில் வரும் பெண்கள், ஆண்களை விடப் பலமடங்கு தைரியசாலிகள். மனித வாழ்க்கையில் சோதனைகளைச் சந்தித்துப் போராடுவதில் அவர்களின் பங்குதான் அதிகம். அவர்களைப் பலகீனமானவர்கள் என்று சொல்லும் ஆண்கள்தான் பலகீனமானவர்கள்" என்றார்.

ஆல்பியின் நாடகங்கள் பார்வையாளர்களைக் களிப்பூட்டுவதற்காகப் படைக்கப்பட்டதல்ல. மாறாக அவர்களின் சிந்தனை ஓட்டத்திற்கு அவரது







நாடகங்கள் தீனி கொடுத்தன. “என் நாடகத்தைப் பார்த்துவிட்டு ஒரு ரசிகர் நேரே வீட்டுக்குச் சென்று படுக்கையில் விழுவதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது” என்று ஒரு பேட்டியில் கூறினார். அதனால்தான் அவரது நாடகங்களில் அமெரிக்க ஆண்கள் பெண்களின் மனப் போராட்டங்கள், வக்கிரங்கள், துயரங்கள் ஆகியவை ஆழமாகப் பரிசீலிக்கப்பட்டன. குடும்பம் என்னும் ஸ்தாபனத்தின் அடிப்படை நம்பிக்கைகளை மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று அவர் விவாதித்தார். 1989இல் சான்பிரான்சிஸ்கோ நகரில் நடை பெற்ற நாடக இயக்க இளைஞர்களின் கூட்டத்தில் பேசுகையில், “தீர்மானிக்கப்பட்ட விதிகளை மீறி சிந்திப்பதும் செயல்படுவதும் மனிதகுல முன்னேற்றத்திற்கு அடிகோலும்” என்று கூறினார்.

“டென்னஸி வில்லியம்ஸுக்குப் பிறகு ஒரு புதிய பாஷையை ஆல்பி தனது நாடகங்களில் புகுத்தினார். இதற்காக அவருக்கு அமெரிக்க நன்றிக் கடன் பட்டிருக்கிறது” என்று நாடக ஆசிரியர் டெரன்ஸ் மெக்னல்லி கூறியிருக்கிறார். அவர் ஆல்பியுடன் பல வருடங்கள் இருந்து ஆல்பியின் நாடகங்களில் இடம்பெற்ற சொல்லாட்சியையும் இறுக்கத்தையும் ரசித்தவர். “ஆல்பியின் நாடக வசனங்களின் ஒலி அவரால் திறம்பட செதுக்கப்பட்ட ஒன்று. அதைப் பிறர் எளிதாகப் பின்பற்ற முடியாது” என்று அவர் மேலும் கூறினார். ●

“ஸிந்துஜா” <weenvy@gmail.com>

# சங்கத்தில் கலகக் கவிதை

**இந்திரா பார்த்தசாரதி**

ஓவியம்: **கஸ்தூரி**

பின்நவீனத்துவ இலக்கிய விமர்சகர்கள் தற்காலத்திய 'கலக இலக்கிய'த்தை பின் நவீனத்துவத்தின் ஓர் அடையாளமாகக் காண்கின்றார்கள். ஆனால், அமெரிக்க இலக்கிய விமர்சகர் ஒருவர், ஷேக்ஸ்பியரையே ஒரு 'கலகக் கவிஞராக'க் காண்கின்றார். இது, பண்டையத் தமிழ் இலக்கியங்களையும் என்னைக் காணத் தூண்டியது.

தொல்காப்பியத்தில் அகத்திணையியலில் ஒரு சூத்திரம் வருகிறது.

அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்:
கடிவரை யிலப்புறத் தென்மனார் புலவர்.

இதன் பொருள் என்ன?

காதல் வாழ்க்கையைப் பற்றிச் சொல்வது அகத்திணை. தனி மனித -சமூக உறவைப் பற்றிச் சொல்வது புறத்திணை.

காதல் செய்திகள் இயற்கையைப் பின்னணியாகக் கொண்டு கூறப்படுகின்றன. ஐந்து நிலப்பகுதிகள் என்று வரையறை செய்திருந்தார்கள். அவை, குறிஞ்சி (மலைப் பகுதி), மருதம் (வளம் மிக்க வயல்கள்), முல்லை (காட்டுப் பகுதி), நெய்தல் (கடற்பகுதி), பாலை (கொடுமையான நிலவகை) என்பன.

குறிஞ்சியில் தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் சந்தித்துப் புணர்ச்சிப் பழகுதலைக் கூறுவதாகும். திருமணத்துக்கு முன்பே உடலுறவு என்பது தமிழ் மரபாக இருந்திருக்கின்றது என்பது, இப்பொழுது இதைப் பற்றி விவாதிக்கின்றவர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய முக்கியமான தகவல். ஆனால், உடலுறவு கொள்கின்ற காதலர்கள் திருமணம் செய்துகொண்டாக வேண்டும். அப்படிச் சில சமயங்களில் நடைபெறவில்லை என்ற காரணத்தினால்தான், முதலில் திருமணம், பிறகு உடலுறவு என்ற சமூகச் சட்டம் ஏற்பட்டிருக்கிறது. இதையும் தொல்காப்பியம் கூறுகிறது. 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப.'



திருமணத்துக்குப் பிறகு தம்பதிகளுக்கிடையே நடைபெறும் ஊடல் (சிறுசிறு பூசல்கள்) மருத நிலத்து பின்னணியில் சொல்லப்படுகின்றது.

தலைவனுக்குச் சமூகப் பொறுப்புக்கள் உண்டு அல்லவா? அவன் போருக்காகவோ தூதாகவோ கல்வி கற்பதற்காகவோ தலைவியை விட்டுப் பிரிவது உண்டு. அவன் திரும்பி வரும் வரை பொறுமையாகக் காத்துக்கொண்டிருப்பது முல்லை நிலத்தின் ஒழுக்கம்.

தலைவன், திரைகடலோடி திரவியம் தேட செல்வது வழக்கம் என்பதால், நெய்தல் பிரிவைக் கூறும். பாலையில், களவிலும் கற்பிலும் நிகழும் பிரிவு பேசப்படுகின்றது.

ஒவ்வொரு நிலத்திலுள்ள மக்கள் யாவர் என்பது பற்றியும் தொல்காப்பியம் சொல்கின்றது. குறிஞ்சியில் இருப்பவர்கள், குறவர்கள்; மருதத்தில் இருப்பவர்கள், உழவர், பள்ளர், பறையர்; முல்லையில், இடையர்கள்; நெய்தலில் பரதவர்; பாலை என்பது ஓர் இயல்பான நிலவரையறை இல்லை. வளம் குன்றி எது வேண்டுமானாலும் பாலை ஆகக் கூடும். (நில உரிமையுடன் செங்கோலோச்சிய இவ்வினங்கள் பிந்திய காலங்களில் பிற்பட்ட வகுப்பினராகி விட்டனர் என்பது வரலாற்றின் துயரம்.)

ஆகவே, இலக்கியத்தில் தலைவனாகச் சித்திரிக்கப்படுகின்றவன், இந்த நான்கு இனத்தில் ஒருவனாக, நில உரிமைப் பெற்றவனாக இருக்க வேண்டும்.

நில உரிமை இல்லாத, பிறருக்குக் குற்றேவல்கள் செய்கின்ற அடிநிலை மக்களுக்குக் காதல் உணர்வே வராதா என்பது நியாயமான கேள்வி.

மேலே கூறிய சூத்திரம்



சான்றுகளாகப் பெரும்பாலும் சங்கச் செய்யுட்களை எடுத்துக் காட்டியுள்ளனர்.

அடிநிலை மக்களைத் தலைவர்களாக வைத்துப் பாடிய சங்கப் புலவர்கள், கைக்கிளை, பெருந்திணை ஆகியவற்றுக்குத்தான் இவர்கள் உரியவர்கள் என்று மனத்தில் கருதிப் பாடியிருப்பார்களா அல்லது தொல்காப்பியர் காலத்திலும் உரையாசிரியர்கள் காலத்திலும் ஏற்பட்டுவிட்ட சமூக மாற்றங்களுக்கேற்ப, இப்பாடல்களுக்குத் திணை வகுக்கப்பட்டனவா என்பது சுவாரஸ்யமான கேள்வி.

சங்க இலக்கியங்களைக் காட்டிலும், தொல்காப்பியத்திலும் உரையாசிரியர் உரைகளிலும், வேத மரபுத் தாக்கம் அதிகமாகத் தெரிகிறது. 'வேதநூலுட் கூறிய இலக்கணத்தாலே' என்று நச்சினார்க்கினியர், தொல்காப்பிய சூத்திரங்கள் சிலவற்றுக்கு உரை காண்கின்றார்.

இவர்களுக்காகத்தான். 'பிறர்க்குக் குற்றேவல் செய்வோரிடத்தும், பிறர் ஏவிய தொழில் செய்தல் வல்லோரிடத்தும், தலை மக்களாக நாட்டிச் செய்யுள் செய்தல் நீக்கப்படாது' என்று இதற்குப் பொருள் கூறும் நச்சினார்க்கினியர், மேலும் சொல்கிறார்:

நடுவணைந்திணைப் புறத்து நின்ற
கைக்கிளைப் பெருந்திணைகளுள்.

இலக்கியத்தில் அடிநிலைமக்களும் தலைவர்களாக வரலாம். ஆனால், குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல், பாலை போன்ற ஐந்து வகை நிலங்களோடு வைத்து எண்ணப்படாமல், புறத்தே நிற்கும் ஒழுக்கமாக மட்டும் கூறப்படும் கைக்கிளை, பெருந்திணை என்ற திணை கோட்பாட்டில் மட்டுந்தான் இவர்கள் தலைவர்களாகக் கருதப்பட முடியும் என்கிறார் நச்சினார்க்கினியர்.

கைக்கிளை என்றால் ஒருதலைக் காமம். பெருந்திணை என்றால் பொருந்தாக் காமம். அதாவது, காம வக்கிரங்கள். நில உரிமை இல்லை என்ற காரணத்தினால், நிலத்தோடு வைத்துப் பேசப்படுகின்ற புணர்ச்சி, ஊடல், இருத்தல், பிரிதல் போன்ற ஒழுக்கப் பாகுபாடு குற்றேவல் செய்யும் மக்களுக்குப் பொருந்திவராது என்பது பொருள்.

சங்கப் பாடல்களில், குறிப்பாகக் 'கலித்தொகை'யில், அடிநிலை மக்களைத் தலைவர்களாக நாட்டிப் பாடல்கள் வருகின்றன. இப் பாடல்கள், பிற்காலத்தில்தான், இயல், திணை பாகுபாட்டில் தொகுக்கப் பெற்றன. சங்க இலக்கியங்களை மனத்தில் கொண்டுதான், தொல்காப்பியர் இலக்கணம் வகுத்திருக்கிறார். தொல்காப்பியம், பெரும்பான்மையான சங்கப் பாடல்களுக்குப் பிறகுதான் எழுதப்பட்டிருக்கிறது என்பதில் ஐயமேதுமில்லை. அதனால்தான், உரையாசிரியர்கள், தொல்காப்பியச் சூத்திரங்களுக்குச்

அடிநிலை மக்களைத் தலைவர்களாகக் கொண்ட 'கலித்தொகை'ப் பாடல்களைப் படிக்கும்போது, அவை இக்காலத்திய எதிர்ப்புணர்வைக் காட்டும் 'கலக'ப் பாடல்களாகத் தெரிகின்றனவேயன்றி, நச்சினார்க்கினியர் கூறுகிறபடி, பெருந்திணைக்குச் சான்றாக அமைந்த பாடல்களாகத் தெரியவில்லை.

நச்சினார்க்கினியர் இதற்கு மருதக் கலி, குறிஞ்சிக் கலி, முல்லைக் கலி ஆகியவற்றினின்றும் சான்றுகள் காட்டியுள்ளார்.

மருதக் கலி செய்யுள், ஒரு கூனியும் ஒரு குறளனும் (குள்ளன்) காதல் செய்வதைக் குறித்து வருவதாகும். ஒத்த குலனும், ஒத்த குணநலன்களும் ('ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'- தொல்காப்பியம். 'பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனும் தலைவியும் எதிர்ப்படுவ'-நச்சினார்க்கினியர் உரை)சேர்ந்தமைந்த தலவனும் தலைவியும்தாம் காதல் செய்வதற்குரியர் என்ற மரபைக் கேள்விக்குரியதாக்குகின்றது இப்பாட்டு.

ஒரு காவியத் தலைவன் காதலியை நோக்கிக் கூறுவது போல், குறளன் கூனியைப் பார்த்துப் பேசுவதினின்றும் தொடங்குகிறது இக்கவிதை.

என் நோற்றான் கொல்லோ?
நீரும் நிழலும் போல் நுடங்கிய மென் மென்சாயல்
ஈங்கு உருச் சுருங்கி
இயலுவாய்! நின்னோடு உசாவுவேன்; நின்றீத்தை!

'நான் உன்னுடன் சில வார்த்தைகள் பேசுவதற்கு நீ என்ன தவம் செய்திருக்க வேண்டும்! நதிக் கரையில் நிற்கும் ஏதோ ஒன்றின் நிழல், நதியில்,

நீரலைகளின் அசைவினாலே சலனமுற்று நுடங்கி நுடங்கி செல்வது போல், நடையிட்டுச் செல்லும் அழகிய பெண்ணே!' என்கிறான் குறளன்.

கூனி, காவியத் தலைவிகள் போல், நாணிக் கண் புதைக்கவில்லை. அவள் பதில் கூறுகின்றாள்.

அன்னையோ! காண்தகை இல்லாக் குறள் நாழிப் போழ்தினான்
ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை
வேண்டுவன் என்று விலக்கினை; நின் போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று?

'அம்மாவோ! இவன் பேசுவதைப் பார்! ஒரு கெட்ட நாழிகையில், ஓர் ஆண் பறவைக்குப் பெண் பறவை ஈன்ற குஞ்சுவைப் போலிருக்கும் இவன் என்னைப் போகாமல் தடுத்துப் பேசுவதைப் பார்! குறளனாய் இருக்கும் உனக்கு என்னைத் தீண்டத் தகுதி உண்டோ?' என்கிறாள் கூனி.

குறளன் கூறுகிறான்: 'கலப்பையில் தைக்கும் வாள் போல ஓரிடம் கூனாக மேலெழுந்து, ஓரிடம் முன்னே வளைந்து நிற்கும் அழகாலே எனக்குக் காம நோயை நீ தந்துவிட்டாய், பெண்ணே! நீ அருளினால் என் உயிர் இருக்கும்.'

'சூதாடும் பலகையை எடுத்து நிறுத்தினாற் போன்றதோற்றத்தையுடைய குறளனே! பெண்களைக் கூடும் முறையைக் கல்லாதவனே! உச்சிப் பொழுதில் வந்து என் கைகளைப் பற்றி அழைக்கிறாயே! வேறு பெண்டிர் உனக்கு உளரோ?' என்கிறாள் கூனி.

"நல்லாளே! கொக்கைப் போன்று மடுப்பை உடைய அழகிய பெண்ணே! என்னைப் பார்த்தா பெண்களைக் கூடும் முறையைக் கல்லாதவன் என்று கூறினாய்? உன்னை எப்படி அணைப்பது சொல். முன்புறமாக அணைத்தால், உன் கூன் என்னை அழுத்தும். முதுகுப் புறம் அணைத்தால் அக் கூன் என்னைக் கூசச் செய்யும். ஆகவே உன்னைக் கூடுதலும் அணைத்தலும் செய்யேன்! வேண்டுமானால், பக்கவாட்டத்தில் உன்னை அணைக்கின்றேன், அருகில் வா,' என்கிறான் குறளன்.

இவ்வாறு தொடர்கின்றது அவர்களுக்கிடையே நிகழும் உரையாடல். இகழ்வதுபோல் தொடங்கி, விருப்பத்தில் முடிகின்றது இப்பேச்சு. நகைச்சுவை போல் தோன்றினாலும், இவ்வுரையாடலின் அடிப்படை நிலையில் நிழலிடும் அவலச்சுவை புலப்படாமல் போகாது. சாமுவேல் பெக்கெட் நாடகங்களில் வரும் கதா பாத்திரங்கள் போல், இருவரும் தங்கள் தங்கள் நிலையினின்றும் மீட்சியைக் காண முடியாமல், நகைச்சுவையினால் அதை மூடி மறைக்கின்றனர்.

கூனி கூறுகின்றாள்: 'ஊருகின்ற ஆமையை எடுத்து நேரே நிறுத்தினாற் போல், நெடிய தோற்றத்தோடு, தோல் இரண்டையும் விலாவுக்குள்ளே வீசி, நான் வராதே என்றாலும் என்னை நோக்கி காமனார் வரும் நடையைப் பார்'.

அவள் அவ்வாறு சொன்னவுடனே, அவன் 'நான்தான் காமன்' என்று சொல்லி நடந்து காட்டுகிறான். 'இவன் நடையைப் பார்' என்று சொல்லி அவள் அகமகிழ்கிறாள்.

இருவரும் இனி ஒருவரையொருவர் இகழ்வதில்லை என்று கூறி, அடுத்த கட்டமாக, அவர்கள் புணர்வதற்கான இடம் குறித்துப் பேசுகின்றனர்.

கூனி சொல்கிறாள்: 'நாம் பணி செய்கிற இவ்வீட்டில் கூடல் இயலாது. பேயும் பேயும் கூடுகின்றன என்று மற்றவர்கள் நம்மை எள்ளி நகையாடுவர். பக்கத்துச் சோலைக்குள் புகுவோம். ஓலை நறுக்கினை எழுதிச் சுருளிட்டு அரக்கு இலச்சினை இட்டாற் போல, முயக்கம் பெற்று, நிறையும்படி இறுகப் புல்லுவோம்.'

நிலவுரிமை பெற்ற தலைவனும் தலைவியும் கூடுவது களவொழுக்கத்தின் பாற்பட்ட புணர்ச்சி. ஆனால், அடிநிலை மக்கள் பயிலும் களவு, பொருந்தாக் காமம் என்று வரையறுக்கப்பட்டுள்ள 'பெருந்திணை' என்கிறார் நச்சினார்க்கினியர்.

பாடலைப் படிக்கும்போது, 'பெருந்திணை'யை மனத்தில் கொண்டுதான் இது எழுதப்பட்டிருக்கின்றதா என்ற கேள்வி நம் மனத்தில் எழமால் இருக்காது.

குறிஞ்சி கலிப்பாடல் ஒன்றில், தலைவன், தலைவியிடம் கூறுகின்றான்:

போற்றாய் களைநின் முதுக் குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயினல்லது நீர்க்கினிதென்று
உண்பவோ நீருண்பவர்.

'உன் இளைமைக்குப் பொருந்தாத முதுமைக்கான அறிவைக் கைவிடு. நீரை உண்பவர்கள் தங்களுக்கு தாகமாயிருப்பதினால் உண்பார்களேயன்றி, அது நீருக்கு இனிமையாய் இருக்குமென்றா உண்பார்கள்' என்று தலைவன் சொல்லி, அவனை மறுக்கும் ஒரு பெண்ணை தன்னுடன் கூடுவதற்கு வற்புறுத்துகிறான்.

அடியோர் தலைவராக வந்த கைக்கிளை (ஒருதலைக் காமம்) பாட்டு என்கிறார் நச்சினார்க்கினியர். காரணம் தெரியுமா? அவர் கூறுகிறார்: 'தீயகாமம் இழிந்தோர்க்குரிமையின்'. இப்பாட்டுடைத் தலைவன் அடிநிலை மக்களுள் ஒருவனாக இருக்கவேண்டுமென்பது அவர் முடிவு!.

சங்க காலப் புலவர்களுக்கிருந்த நகைச்சுவை உணர்வு இலக்கண ஆசிரியர்களுக்கும் அவற்றுக்கு உரை கண்ட உரையாசிரியர்களுக்கும் இல்லை என்பதுதான் வருந்ததக்கச் செய்தி! ●

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>

# பயங்கரவாதி

## தமிழவேள்

இலங்கை அரசாங்கம் சமாதான ஒப்பந்தத்தைத் தன்னிச்சையாக முறித்துக்கொண்டு போரினை வலிந்து தொடங்கிய 2006இலிருந்து போர் முடிந்த 2009 வரையிலான காலகட்டத்தை களமாகக் கொண்டு வெளிவந்துள்ள நாவல் 'பயங்கரவாதி'. ஈழ எழுத்தாளரால், ஈழ மண்ணிலிருந்து, ஈழம் பற்றி எழுதப்பட்ட நாவல்.

புலிகளின் அரசியல் தலைநகராக இருந்த கிளிநொச்சியிலிருந்து, இராணுவத்தின் கட்டுப் பாட்டிலிருந்த யாழ்மாநகரத்தில் அமைந்துள்ள பல்கலைகழகத்திற்கு கதையின் நாயகனான மாறன் மேற்படிப்பில் சேர வருவதிலிருந்து தொடங்குகிறது நாவல். பின்னர், ஈழத்தவர்கள் வரலாற்றிலிருந்து பிரித்தெடுக்க முடியாத, அவர்களுடைய வாழ்வியலோடு இரண்டற கலந்துவிட்ட யாழ் பல்கலைக்கழகத்தை மையப்புள்ளியாகக் கொண்டு கதை சுற்றிச் சுழல்கிறது. ஈழத்தை சிதைத்தழித்த போரானது யாழ் பல்கலைக்கழகத்தையும் எப்படி பாதித்தது, பல்கலைக்கழக மாணவர்கள் மற்றும் அவர்தம் குடும்பத்தினரைப் போர் எப்படியெல்லாம் குறுக்கு வெட்டாக சிதைத்து என்பதை அழுத்தமாகவும் உணர்வுப்பூர்வமாகவும் பதிவு செய்கிறது.



மாறன், மலரினி, துருவன், சுதர்சன், அறிவுச்சோலை காப்பாளர் பாரதியம்மா, ஆதரவற்ற சிறுவன் மகிழன், முன்னாள் மாணவர் தலைவர் குமணன் என்று கதையில் வரும் மாந்தர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு பின்கதை இருக்கிறது. இவர்களூடாக ஒரு கடிகாரத்தின் பெண்டுலம் போல் நாவல் 70களுக்கும் 80களுக்கும் 90களுக்கும் முன்னும் பின்னுமாய் நகர்ந்து, வலி மிகுந்த வாழ்வியலை நமக்கு சொல்லிச் செல்கிறது. கனவுகள் கலைவது போல ஈழத்தாயகம் எங்கும் உறவுகளை இழந்து அலையும் மனிதர்களின் கதைகள்.

போராளிகள் நாட்டினை மீட்கும் போராட்டத்தில் ஈடுபட்டிருக்க, பிள்ளைகளோ எப்படியாவது படித்துவிட வேண்டும் என்று போராடுகின்றனர். இரண்டுக்கும் இடையூறாகப் போர் வருகிறது. வலிந்து திணிக்கப்பட்ட போருக்கு எதிராகவோ தாயக விடுதலைக்கு ஆதரவாகவோ தார்மீக ஆதரவைத் தரமுடியாமல் தத்தளிக்கும் மாணவர்களின் தவிப்புக் கண்களில் கண்ணீரை வரவழைக்கிறது.

இத்தனைக்கும் இடையில் அல்லி மலர் போல ஒரு மெல்லிய காதல். கடும் போருக்கும் பெரும் இழப்புக்கும் இடையிலும் கல்லூரி வளாகத்தில் அரங்கேறும் மாணவர்களிடையேயான குறும்புத்தனங்களும், மாறன் -மலரினி இடையேயான காதல் காட்சிகளும், எல்லா மனிதர்களையும் போல அவர்களும் இரத்தமும் சதையுமான கனவுகள் தாங்கி வாழ்ந்த மனிதர்கள்தான் என்பதை ஞாபகப்படுத்துகிறது. அப்படி எத்தனை எத்தனை மனிதர்கள், அவர்களுக்குள் எத்தனை எத்தனை கனவுகள் யாருக்கும் தெரியாமல் மண்ணோடு மண்ணாகப் புதைந்து போனாதுவோ? நினைக்கும்போதே நெஞ்சம் விம்முகிறது.

கதையின் நாயகன் இராணுவ சோதனைச் சாவடிகளைக் கடக்கும் ஒவ்வொரு முறையும், படிப்பவர் இதயதுடிப்பு அதிகமாகி படபடப்பதை தவிர்க்க முடியவில்லை. கேம்பஸ் அம்மம்மா, மனசாட்சியுள்ள சிங்கள இராணுவ அதிகாரி சந்திம, கப்பற் கேப்டன் அன்வர், துரோகி நிரோஜன் என்று காத்திரமான பாத்திரங்கள் கதையை மேலும் கனக்கச் செய்கிறார்கள்.

பல்கலைக்கழகத்தில் அத்துமீறி நுழையும் ராணுவம், போருக்கு எதிராகப் போராட துணியும் மாணவர்கள், இரக்கமற்ற போரில் வெடித்துச் சிதறும் அன்புச்சோலை, பல்கலைக்கழக வளாகத்திலிருந்து இழுத்துச் செல்லப்படும் மாணவர் தலைவன் குமணன், இராணுவத்தின் ஒட்டுமொத்த கோரமுகமாக மாறி மாறனை மிரட்டும் சிங்கள அதிகாரி பந்துல, தாக்குதலில் விழும் குண்டுகளுக்கும், வெடிக்கும் துப்பாக்கிகளுக்கும் இடையில் மலர்ந்து தடுமாறும் மலரினியின் காதல் என்று பரபரப்பாக நகர்கிறது நாவல்.

நாவலின் ஒவ்வொரு பக்கமும் படிக்கப் படிக்கக் கண்களின் முன் காட்சிகளாய் உயிர்கொள்ளச் செய்வது தீபச்செல்வன் எழுத்தின் பலம். 'வழக்கமாக துவக்கு பிடிக்கத்தானே ஆள் அனுப்பும், இப்போ என்ன படிக்க ஆள் அனுப்பியுள்ளது' என்ற பந்துலவின் ஏளனத்திற்கும், 'எப்படியாவது படித்துவிட வேண்டும், அதுதான் தலைவரின் ஆசையும்' என்ற மாறனின் வைராக்கியத்திற்கும் இடையில் பிறக்கிறான் பயங்கரவாதி.

பயங்கரவாதி - தீபச்செல்வன்;
விலை: ரூ. 400; வெளியீடு: டிஸ்கவரி புக் பேலஸ்;
தொலைபேசி: +91 99404 46650

# உணர்வோடு விளையாடும் பறவைகள்

பொ. கருணாகரமூர்த்தி

ஓவியம்: திலாவர் கான்

நான்வீடுதேடிக்கொண்டிருந்தேன். வீடு அம்சமாக அமைந்திருந்தால் அது என் பணியிடத்துக்குத் தொலைவில் இருந்தது; அணுக்கத்திலும் பொதுப்போக்குவரத்துவசதிகளுடனும் அமைந்தவை சுமாரானவையாகவும் மின்னுயர்த்தி வசதிகள் இல்லாமல் 3வது / 4வது தளத்திலும் இருந்தன. கடைசியில் ஹன்னா என்றொரு பெண் தன்வீட்டை பகுதியாக வாடகைக்குக் கொடுக்கவிருப்பதை 'Zweitehand' பத்திரிகையின் சிறு விளம்பரப் பகுதியில் பார்த்தேன். அநேகமாக வீட்டைப் பகுதியாக வாடகைக்குக் கொடுப்பவர்கள் ஆண்களுக்குத் தரமாட்டார்கள். இருந்தும் ஒரு வெளிநாட்டு ஆணுக்கும் வாடகைக்குத் தருவியாவென்று ஹன்னாவுக்கு மின்னஞ்சல் எழுதினேன். அன்றே பதில் வந்தது. ஒரு குடியிருப்பாளர் இயைந்து அனுசரித்துப்போகக்கூடிய ஒருவராகஇருப்பதுதான் முக்கியம். 'ஆண் / பெண், சுதேசி / விதேசி, கருப்பு / வெளுப்பு இவையெல்லாம் எனக்குத் தடைகளில்லை.'

அடுத்தநாள் அவள் தந்திருந்த நேரத்தில் வீட்டைப் போய்ப் பார்த்தேன். அதையும் நிராகரித்துவிடக் காரணங்கள் எதுவுமிருக்கவில்லை. வீட்டின் பிரதம குடிருப்பாளருக்கான முதன்மை ஒப்பந்தம் அவளிடமே இருந்தது. 'ஒருமாத மனைப்பகிர்வில் இருவருக்கும் ஒத்துவரவில்லையானால் என் பகுதி வாடகை ஒப்பந்தம் முறிவடையும்' என்பதைத் தவிர அவள் வேறெதையும் நிபந்தனையாக விதிக்கவில்லை. பேச்சில் மிகவும் புரிதலுள்ள பெண்ணாகத் தெரிந்தாள். அவ்வீட்டுக்கே குடிபோனேன்.

அது முதலாம் உலக மகாயுத்தம் முடிந்தவுடன் 1925இல் கட்டப்பட்டதும் புராதன கட்டிடங்களைக் கண்காணிக்கும் திணைக்களத்தின் (Landesdenkmalamtes Berlin) இன்னும் 100 - 150 வருடங்கள் தாக்குப்பிடிக்குமென உத்தரவாதமும் பெற்றதுமான பழைய சாம்பர் நிறப் பார்க்கல்லிலான உறுதியான கட்டிடம். பழைய குடியிருப்புகளில் வாழ்வதிலுள்ள அனுகூலம் நவீன அடுக்ககங்களை விடவும் ஒப்பீட்டளவில் அவற்றுக்கு வாடகை குறைவாக இருக்கும். சிலவற்றில் மின்னுயர்த்தி வசதிகள் இருக்காது. எமது வீடு முதலாவது தளத்தில் இருந்ததால் எமக்கு அதைப் பற்றிய கவலையில்லை. அறஞ் சார்ந்து விசாரஞ் செய்தால் இவ்வகைச் சிந்தனை கொஞ்சம் சுயநலந்தான். ஆனாலும் தனியொரு மனிதன் மானுடம் நிரற்படுத்தி வைத்திருக்கும் துயர அடுக்குகளில் எதுக்கென்றுதான் வருந்துவது?

அருமையறிந்து பராமரிக்கப்பட்ட, மனையின் இருவருக்கும் பொதுவான பிரதான வெளிவாசலுக்கு செதுக்கல் சித்திரங்களுடனான மரக்கதவு. அதுவே ரோல்ஸ் ராய்ஸின் கதவுகளைப்போல ஓசையின்றி மிருதுவாகத் திறந்து சாத்தும். அதன் திறப்புகள் எம்மிருவரிடமும் இருந்தன. எங்கள் இருவர் படுக்கை அறைகளையும் ஒரு நீண்ட இடைகழி பிரித்தது. அதன் முடிவில் 'L' வடிவிலமைந்த பொதுவான சமையலறை, அதன் ஒரு புயத்தில் நீண்டதொரு சாப்பாட்டு மேசையும் அதைச் சுற்றிக் கதிரைகளும் இடப்பட்டிருந்தன. மறு புயத்தில் மின்னடுப்பு, வெதுப்பிகளும் கழுவுதொட்டிகளும். எனக்கு யாராவது விருந்தினர்கள் வந்தால் அம்மேசையைச் சுற்றி அமரவைத்தே உபசரிப்பேன்.



ஒரு முறை ஹன்னாவின் பள்ளித்தோழியென்று ஒருத்தி தென்மாநிலத்திலுள்ள ஆக்ஸ்பர்க் என்றொரு நகரத்திலிருந்து ஏதோ பணியுயர்வுக்கான நேர்முகத் தேர்வுக்கு வந்து இரண்டுநாட்கள் கலகலப்புடன் தங்கிப்போனாள். மற்றும்படி அவளுக்கும் விருந்தினர்களென்று எவரும் வீட்டுக்கு வருவதோ தங்குவதோ இல்லை. அவரவருக்கு அவரவர் வாழ்வியல்த்



தோரணைகள். அவளோ நானோ ஆரம்பத்தில் சமையலறைக்குள் அதிகம் வினைக்கெடமாட்டோம்; ஆதலால், எங்கள் சமையல்கள் மற்றவரால் தாமதமாவதுமில்லை. அவள் 'பஸ்டா' வகைகளை வெள்ளைவைன், அடர் கிறீம் எல்லாம் சேர்த்து அலாதியான சுவையுடன் சமைப்பாள். அப்படி அவள் 'பஸ்டா' சமைக்கும் வேளைகளில் எனக்கும் கிடைக்கும். நான் எப்போதாவது இறால் அல்லது கோழியிறைச்சியில் செய்யும் இடியப்பப் பிரியாணியும் பிரைட் ரைஸும் அவளுக்கும் நிரம்பப் பிடிக்கும்.

ஆரம்பத்தில் எங்கள் இருவருக்கும் சமையலைறையில் தனித்தனியான குளிர்ப்பதனப் பெட்டிகள்இருந்தன. அவளுக்குசியாண்டிகிளாசிகோ, ஃபேமிக்லியா பார்பெரா டி அஸ்தி போன்ற சிவப்பு வைன் வகைகள் மிகவும் பிடிக்கும். சிவப்பு வைன் வகைகளைக் குளிர்பதனப்பெட்டிகளுக்குள் வைத்துப் பாதுகாக்க வேண்டியதில்லை, கெட்டுவிடாது. விரும்பினால் அருந்தமுதல் கொஞ்ச நேரத்துக்கு அவற்றைக் குளிரில் வைத்தாலே போதும்.

ஒருநாள் அவளாகவே சொன்னாள்: "ஜீவன் எதுக்கு உனக்கு தனியாகவொரு குளிர்பதனப்பெட்டி.. கொஞ்சம் ஜூஸும் பியரும் முட்டைகளும் மீனும் கோழியுந்தானே வைத்திருக்கிறாய்... உன்னுடைய பெட்டியை நிறுத்திவிட்டு அதிலுள்ளவற்றை என்னுடையதுக்குள் வைத்துவிடேன். மின்சாரப் பாவனையுங்குறையும்; சூழலுக்கும் நல்லது" என்றாள். சூழல் பிரக்ஞை உள்ள பெண்ணானபடியால் அடுத்தவர்களைப் பற்றியும் சிந்திக்கத் தெரிந்த நல்லபெண்ணாகத்தான் இருக்கவேண்டும். சம்மதித்தேன்.

அவள் Femina, Freundin, Flow, Brigitte, Gala, Cosmopolitan, Vogue, போன்ற மாதர் இதழ்களையும் விரும்பி வாங்கிப் படிப்பாள். இன்னும் திரில்லர்கள், கிரைம் நாவல்கள் வாசிப்பதிலும் ஆர்வம். ஆனால், அவற்றை பொதுப்புத்தகப் பெட்டிகளிலிருந்தோ நூலகத்திலிருந்தோ படித்துவிட்டு யாரும் தெருவில் வைத்திருந்தாலோ எடுத்துவருவாளேயன்றி, அவ்வகை நூல்களுக்காக பென்னி செலவுசெய்யமாட்டாள்.

நமக்குப் பொதுவான மற்றொரு வதியுமறையும் இருக்கிறது. அதற்குள் தொலைக்காட்சியையும் இரண்டு மென்னிருக்கைகளும் வைத்திருக்கிறோம். ஹன்னா ஓய்வுநாட்களில் அவ்வறையினுள் அமர்ந்து விதவிதமான வண்ணக்குச்சிகளை வைத்துக்கொண்டு கோட்டோவியங்கள் வரைந்து தள்ளுவாள். கற்றுத்தேர்ந்த ஓவியரல்ல, எனினும் அவளிடம் கேலிச்சித்திரக்காரர்களைப்போல நினைத்ததை

வெளிப்படுத்தும் ஆற்றலிருந்தது. சமையலறையின் கிழக்குச்சுவரில் ஒரு மென்பலகை உள்ளது. ஹன்னா அதில் அடுத்தமுறை வாங்கவேண்டிய சமையலுக்கான பொருட்கள், வெஞ்சனங்களைக் காகிதத்தில் குறித்துப் பதித்திருப்பாள். சுமாராக அமைந்துவிடும் ஓவியங்களையும் அப்பலகையில் பதிக்கும் ஊசிகளால் பதித்துவிடுவாள். அவ்வாறு ரோமானிய காதல் தேவதை வீனஸையும் கிரேக்க தாபம் / ஆசையின் தேவதை ஈரோஸையும் வரைந்து பதித்தியிருந்தாள். 'நம்மிடமும் காதல்தெய்வங்கள் இருப்பதையும் மன்மதன் கரும்பினாலான கணையில் தாமரை அரும்பின் பாணத்தைப் பொருத்தி ரதிமேல் ஏவுவான்' போன்ற மரபுவழிக் கதைகள் இருப்பதையும் சொன்னேன், ஆர்வமாகக் கேட்டாள்.

ஒருநாள் அவள் ஒரு ஓவியத்துடன் நீண்ட நேரம் வினைக்கெட்டுக் கொண்டிருந்தாளா... சும்மாதானும் அவளைக் கலாய்க்க வேண்டி, "ஏம்மா பெண்களில் லியோனார்டோ டா வின்சி, மைக்கேலேஞ்சலோ, ரெம்ப்ராண்ட், வின்சென்ட் வான் கோக், பாப்லோ பிக்காசோ போல் உலகம் போற்றும் ஓவியர்கள் ஒருவரும் உருவாகவில்லையே" என்றேன்.

"பார் ஜீவன்... ஓவியத்தப் பொருத்தமட்டில் நானொரு கத்துக்குட்டிப்பாப்பா, அவர்கள் தரத்தில் நின்று பேச எனக்கெல்லாம் தகுதிகிடையாது... மெஸ்யூ" என்றாள் வெள்ளந்தியாக. (மெஸ்யூ › Mister › மிஸ்டர் (ஃப்றெஞ் வழக்கு))

பின் என்ன நினைத்தாளோ ஒரு சாசேஜ்ஜையும் அதோடுசேர்ந்து நசுங்கும் இரண்டு முட்டைகளை நிழல்போல்வரைந்துமென்பலகையில் பதித்திருந்தாள். சாசேஜ்ஜின் செல்லக்கவிப்பும் பரிமாணாங்களும் ஒரு குழந்தைக்கே புரிந்துவிடும், 'அது ஆண் லிங்கத்தின் குறியீடு'. இவள் என்னை உசுப்பத்தான் இந்த மாதிரிப் பண்ணுறாள்... அடுத்தநாள் நானும் ஒரு 'ஆவுடையாரை' வரைந்து அதன் அருகிற் பதித்துவிடலாமா என யோசித்தேன். ஓவியம் எனக்கொரு இடைஞ்சலையும் தராதவரையில் நான் அதைப் பொருட்படுத்தாதிருப்பதே உத்தமமென்றிருந்தேன். பின் ஹன்னா சமையலறையில் இருந்தவேளை அவள் ஓவியத்தை அப்போதுதான் கவனித்த மாதிரியான பாசாங்கோடு பார்த்தேன்.

"மெஸ்யூ... சொல்லு, இந்த ஓவியம் உன்னை எதுவிதத்திலாவது தொந்தரவோ சங்கடப்படுத்துகிறதா... அப்படியென்றால் எடுத்துவிடுகிறேன்" என்றாள் தன்மையாக.

"ஓ... நொன் நோ, ஒரு விதத்திலும் தொந்தரவு செய்யவில்லை, சமையலறையில் சாசேஜ் இருப்பது இயல்புதானே மாம்."

"அதுதானே... இந்துக்கள் ஆண் லிங்கங்களையும் பெண் குறிகளையும் வழிபாடு செய்வார்களென்று படித்திருக்கிறேன்" என்றாள்.

"ஏனைய மதங்களைப் போலத்தான் இந்து மதத்திலும் பல உட்பிரிவுகள் இருக்கின்றன. இந்து மதத்தை பல தத்துவங்களின் கலவை என்பார்கள். இந்து நதிப் பள்ளத்தாக்கில் வாழ்ந்தவர்கள் / ஆதி சைவர்கள் என நம்பப்படுபவர்கள் ஒருசேர லிங்கத்தையும் யோனியையும் உற்பத்தியின் குறியீடுகளாகக் கருதியதால் சைவர்கள் லிங்கத்தையும் சாக்தர்கள் யோனியையும் வழிபட்டார்கள். சாக்தம் எனும் சக்தியை வழிபட்ட பிரிவினர் அநேகமாக இப்போது இல்லை எனலாம். ஆனால், லிங்கத்தையும் லிங்கம் யோனிக்குள் பொதிந்த நிலையிலுள்ள ஆவுடையார் எனும் உருவையும் பூஜித்துவழிபடும் வழக்கம் சைவர்களிடம் இன்னும் தொடருகிறது" என்று மேலோட்டமாகச் சொல்லிவிட்டு இணைவலையில் எமது சில வழிபாட்டு உருவங்களின் வகைமைகளையும் தரவிறக்கிக்காட்டினேன், அதிச யித்துப் பார்த்தாள்.

"இந்துக்களிடம் மட்டுமல்ல... ஆதியில் யூதர்களிடமும் யோனியை வழிபடும் வழக்கம் இருந்தது. Yvonne என்று பிரெஞ்சிலும் / ஸ்பானிஸிலும் வழங்கப்படும் பெயர் ஆதி ஹீப்ரூ மொழியிலிருந்த Yonnie என்பதன் திரிபேயென தான் சொற்பிறப்பியலில் (Etymology) படித்திருக்கிறேன்" என்றாள். இவ்வளவு அறிந்திருப்பவள் நம் சுயம்பு / சிவ / மஹாலிங்கங்கள் பற்றியும் தெரிந்து வைத்திருக்கலாம். நான் அன்று சாமர்த்தியமாக அந்த விஷயத்துக்கு தேருக்குப்போடுவதைப்போல் சறுக்குமுட்டொன்றைப்போட்டு வேறொருதிசையில் திருப்பிவைத்தேன்.

நாளடைவில் எம்மிடையே புரிதலும் நெருக்கமும் அதிகமாக சமையலறையிலிருந்தபடியே எமக்கிடையேயான வாழ்வியல், தத்துவங்கள், சம்வாதங்களை விசாரஞ் செய்வதோடு பழமைபாடுகளையும் நாட்டு நடப்புகளையும் பரிவர்த்தனை செய்யலானோம். ஒருநாள் இரவு இருவரும் சாப்பிட்டபடியே நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அவளும் பேசிக்கொண்டே கொஞ்சங்கொஞ்சமாக அவளது பிரிய 'சியாண்டி' வைனை வழமையைவிட அதிகமாகவே மாந்திவிடவும் போதையில் மெல்ல மிதக்கலானாள். "சாராயம்போனால் பூராயம் வருமா." அன்றைக்குத்தான் முதன்முதலாக தனது குடும்பம், இளமைக் காலங்கள். பணி பற்றியெல்லாம் என்னிடமும் பகிர்ந்துகொண்டாள்.

டிஹெச்எல் விநியோகசிற்றுந்துகளில் பொதிகளை விநியோகம் செய்துகொண்டிருந்த என்னிடம் அவளிடம் பீற்றிக்கொள்ள அத்தனை உத்தியோக மஹாத்மியங்கள் இருக்கவில்லை.



"ஹன்னா திருமணம் பற்றி என்ன நினைக்கிறே" என்றதுக்கு உடனே, "நான் நிறைய பெண்ணியம் பற்றி வாசிப்பவள். அதனால், 'எனக்கு அதில எல்லாம் அத்தனை நம்பிக்கையில்லை' என்று சொல்வேனென்று ஒருவேளை நீ எதிர்பார்த்திருப்பாய். ஆனால், திருமணமும் குறிப்பாகப் பெண்களுக்கு நல்லதென்றே நினைக்கிறேன்" என்றாள்.

"ஏன் ஆண்களைவிடப் பெண்களுக்கு நல்லதெங்கிறாய்... பெண்ணோடு ஒரு ஆணும் இருந்தால்தானே திருமணம்... கொஞ்சம் விஷயத்தை இந்த மத்தனுக்கும் புரியும்படியாய்த்தான் சொல்லேன்."

"சொல்றன் பொறு" என்றவள் தன் கிளாஸில் மேலும் வைனை வார்த்து ஒரு தரம் அதில் வாயைவைத்து மிடறிவிட்டு 'மௌனமாக' இருந்தாள். அம்மௌனத்தை, 'இதை இவனிடம் சொல்லத்தான் வேண்டுமா' எனும் தயக்கமாக நான் பொருளுணர்ந்தேன்.

பின் பேசினாள்.

"நான் பிறந்தபோது என் பெற்றோர்கள்கூடத் திருமணமாகாமல் சேர்ந்தே வாழ்ந்திருந்தனர். ஒருமுறை என்னுடைய குடும்பப் பெயர் எங்கிருந்து வருகிறது என்று நான் அம்மாவிடம் கேட்டபோது, 'நீ பிறந்தபோது என்னுடன் சேர்ந்து வாழ்ந்த ஜோனஸ்ஸே உன் அப்பாவென்று நான் நம்பியதாலும் அவருடைய மேயர் என்கிற குடும்பப்பெயர் முதற்குடிமகன் என்கிற நல்ல அர்த்தத்தைக் கொண்டிருந்ததாலும் அப்பெயரையே உனது குடும்பப் பெயராகப் பதிவு செய்தேன்' என்றார் அம்மா."

இதைச்சொல்லி முடிக்கையில் அவள் குரல் கம்மிக் கண்கள் பனித்துக் கொண்டன. அவளது மனதைத் திசை திருப்பலாமென்ற எண்ணத்தில், "ஜெர்மனியில் ஒரு தாய் விரும்பினால் அவர் தன்னுடைய குடும்பப் பெயரையும் தன் பிள்ளைக்குத் தரமுடியுமல்லவா.." என்றேன்.

அவள் மேலும் மேசையில் கொஞ்சநேரம் மௌனமாக அமர்ந்திருந்துவிட்டு எழுந்து, "குட்நைட்" சொல்லிவிட்டு லேசான உலாஞ்சலுடன் நடந்துபோய் படுக்கையறைக்குள் புகுந்தாள்.

ஒருமுறை அவளுக்குக் காய்ச்சல் வந்தது, குலைப்பன் கண்டவள் போல் உடல் விதிர்த்துக் கொண்டிருந்தாள். Novaminsulfon 500mg வில்லை ஒன்றைக் கொடுத்துவிட்டு, பான்டேஜ் நறுக்கொன்றை நனைத்து அவளின் நெற்றியில் ஒட்டிவிட்டிருந்தேன், இரண்டு மணி நேரத்தின்பின் உடல் வெப்பத்தை அளந்து பார்த்தால் 39இலிருந்து 37 ஆகத் தணிந்துவிட்டிருந்தது.

"இரண்டே பாகை மட்டும் குறைந்திருக்கு" என்றேன்.

"என்னையேதோ எயிட்ஸ்காரிட்ட மாதிரி எட்டிநின்று ஒத்துறே... இந்தக் காய்ச்சல் மட்டும் இல்லேன்னா நானொரு ஆரோக்கிய மடந்தையாக்கும்...என்னை அப்படியே கொஞ்சநேரம் அணைத்து இறுகக் கட்டிப் பிடித்திருப்பாயானால் இன்னுமொரு பாகை இறங்கிடும், எங்கம்மா எனக்கு அப்படித்தான் செய்வா..." என்றாள் வீறமைவாக.

"அப்புறம் உன் உஷ்ணம் மெல்லமெல்ல எனக்குள் ஏறத்தொடங்கிவிட்டால் எந்து யான் செய்யும்?"

என் அச்சம் அதல்ல... 'அதைவிட திரிபடைந்த உக்கிரத்தீயுயிர் (Multiple Variant Virus) காமத்தீ கிளம்பித் தகிக்கத் தொடங்கிற்றென்றால் அது என்னையும் சாய்ந்திடுங்கற' அசல் சூக்குமத்தை ஹன்னா அறியாள்.

"அப்படித்தான் உடல் சூடானால் வழக்கத்தில் எதைச் செய்வியோ... அதைச் செய்யேன்... இலேசான கட்டிப்பிடித்தல், முத்தம் செய்வதால் யாருக்கும் பெரிய சேதாரங்கள் வந்திடாது மெஸ்யூ.." என்றாள், கண்ணைக் குறும்பாகச் சிமிட்டிக்கொண்டு. சின்னதாகத் தொடங்கினாலும் தொடங்கிவிட்டால் இடைநிறுத்தி விடக்கூடிய சங்கதியா அது?

"உடல் சூடாகும்போது வழக்கத்தில் என்ன செய்வேங்கறதை நான் உனக்குச் சொல்லியிருக்கிறேனா.." என்றேன் பொய் கோபத்துடன்.

மறுநாள் பொது அங்காடிக்கு என்சீருந்தில் போயிருந்தேன். ஹன்னா பலவீனமாக இருப்பது நினைவில் வரவும் எனக்கான மளிகைப் பொருட்களோடு அவளுக்கும் சேர்த்து வைன்கள், கோதுமை மாவு, கிழங்கு, சமையலெண்ணெய், தண்ணீர், பாலன்ன பாரமானவற்றை வாங்கிவந்து கொடுத்தேன்.

"வாவ்...இதையெல்லாம் நீ என்னைக்கட்டிக்கிட்ட

பின்ன பண்ணலாமே, எதுக்கு மெஸ்யூ... இப்பவே எதுக்கு இத்தனை சிரமப்படுறே" என்றாள்.

"சும்மாவொரு சமூக சேவையென்றே வைச்சுக்கோயேன்.."

"நாம கட்டிக்கிட்ட பின்னாலும்... நிஜமாய் இதே மாதிரி எனக்குச் சாமான்களைச் சுமந்துவந்து கொடுப்பியா அன்பே.." என்றாள் கண்களில் குறும்பு தவழ.

"ஏன் கூடாது?"

என் கையை ஆதுரத்தோடு இழுத்துவைத்து முத்திவிட்டு மிருதாக அதைத் தடவிக்கொடுத்தாள்.

எங்கள் குடியிருப்பின் தரைத்தளத்தின் கிழக்குச் சுவரில் ஒரு பக்கக் கதவு இருக்கிறது, அவ்வாசலால் வெளியேறி வளவின் பின்கொல்லைக்கும் குடியிருப்பாளர்களின் வாகன நிறுத்திடத்துக்கும் வரலாம். எங்கள் வீடமைந்த வீதியின் ஓரமாக ஒரு 'டிராம்' பாதையுமுண்டு. அது கிழக்கு நோக்கிபோய் மேலும் இரண்டோ மூன்று தரிப்பிடங்கள் கடந்து ஹெர்ஸ்பெர்க் எனும் தரிப்பிலுள்ள பிரபலமான 'குயின் எலிசபெத்' இதயநோய் மருத்துவமனையில் முடிவுறும்.

ஒரு நாள் ஹன்னா பக்கக் கதவால் பூனைபோல் ஓசைப்படாமல் இறங்கி ஒருவனின் அணைப்போடு டிராமில் ஏறிப்போனாள். அதே இளைஞன் ஒரு நாள் வீதியில் பார்த்த என்னிடம், "மெஸ்யூ இங்கே பாலியல் விடுதிகள் ஏதும் இருக்கா.." என்று விசாரித்தவனைப் போலிருந்தான். அன்றைக்கு நான் அதிகமாகக் குடித்து விட்டிருந்தேனோ தெரியவில்லை. அந்த இளைஞனையே ஹன்னா ஒருநாள் வேறொரு பெண்ணுடன் வீட்டுக்குக் கூட்டிவந்து ஏதேதோவெல்லாம் அமர்க்களமாகச் சமைத்து விருந்துபோட்டு அனுப்பியது கனவிற்போலிருந்தது. அந்த இளைஞன்தான்போலும் கிற்றாரை விளையாடிக் கூடவே இரண்டொரு பாடல்களைப் பாடியதான ஒரு பிரமை. அவ்விரவின் நிகழ்வுகள் கனவிற்போலும் பனிப்புகாருக்குள்ளால் தெரிவதுபோலவும் ஞாபக அடுக்கில் தெளிவின்றிக் கலங்கியுந்தெரிந்தன. அவனையோ கூடவந்த பெண்ணையோ ஹன்னா அறிமுகப்படுத்தியதான ஞாபகம் மட்டும் வரவேயில்லை.

பெர்லின் ஜெர்மனியின் தலைநகரமாகிய பின்னால், ஒரு நாள் மாலையில் பணியிலிருந்து திரும்புகையில் ஹன்னாவே லிச்சி பழங்கள் வாங்கிவந்தாள், உயர்தர மதுவொன்றின் மென்மையான வாசனை அதிலிருந்து வந்து கொண்டிருந்தது. வதியுமறையில் அவற்றைச் சுவைத்தபடியே வழக்கமான நம் பழமைபாடுகளைப் பேசிக் கொண்டிருக்கையில் பெர்லினின் வேலை வாய்ப்புகள் பற்றிய பேச்சு வரவே ஹன்னாவே சொன்னாள்: "நான் என்ன தொழில் பண்ணுறேன் என்பதை அறியும் ஆர்வம் உனக்கும் இருந்திருக்கும் இல்லாமலுமிருக்கும். ஆனாலும், நாம இவ்வளவு காலம் நெருங்கி இருந்தும் அதுபற்றி எதுவும் என்னைக் கேட்காமல் இருக்கிறாய் பாரு.. உன்னுடைய அந்தப் பண்பு எனக்குப் பிடிச்சிருக்கு."

பெர்லின் தலைநகரமாகிவிட்டதால் இங்கேயுள்ள அமயத்துக்கான செகிரடேறியல் சேர்விஸ் செய்யும் குழுமங்களின் தேவையும் அவ்வகைக் குழுமங்களில் வேலைவாய்ப்புகள் அதிகரித்திருப்பதையும் அவ்வகைக் குழுமங்களின் சேவை வகைகள் பற்றியும் விபரித்துச் சொன்னாள். வெளிநாடுகளிலிருந்தோ ஜெர்மனியின் இதர நகரங்களிலிருந்தோ வியாபார நிமித்தமாக பெர்லின் நோக்கிவரும் வணிகர்களுக்கு அவர்களின் தேவைகள் தொடர்பான தகவல்கள் குறைவாகவே இருக்கும். அவ்வாறானவர்களின் வியாபார வாய்ப்புகளை ஆய்வு செய்வதற்கும்; புதிய வியாபரமொன்றை இங்கு ஆரம்பிப்பிக்க விரும்புபவர்களுக்கு நுகர்வோர்களின் ஊடாட்டங்களை, பரம்பலை ஆய்வுசெய்து பரிந்துரைப்பது, அவ்வவ் வணிகக் கேந்திரங்களை அடைவதற்கான வசதிகளை ஆராய்ந்து களநிலமைகளை அவர்களின் மேலிடத்துக்கு அறிக்கையளிக்கவும்; புதிய வியாபார ஒப்பந்தங்கள் செய்வதற்கும் வணிகத்துறையினரும் அவர்களது முகவர்கள் / பிரதிநிதிகள் வருவார்கள். வாடிக்கையாளர்களின் நோக்கத்தைப் புரிந்துகொண்டு அவர்களுக்கு உகந்த உள்ளூர் வணிக முகவர்களை அறிமுகப்படுத்துவது, அதற்கான சந்திப்புகளை சிலவேளைகளில் விருந்துகளையேற்படுத்துவது அவர்களின் தேவைகளில் ஒத்தாசைகள் புரிவதென்று இக்குழுமங்களின் சேவைகள் விரியும்.

ஒருவர் ஓரிடத்தில் ஒரு காலணி நிலையத்தை / உணவகத்தை அமைக்க விரும்பினால் அதை அமைக்க உத்தேசித்திருக்கும் இடத்தைத் தாண்டி ஒரு நாளைக்கு எத்தனை சிற்றுந்துகள், விசையுந்துகள், மிதியுந்துகள், கடந்து செல்கின்றன, எத்தனை பாதசாரிகள் கடந்து செல்கிறார்கள் என்பதைக்கூட கணிப்பீடு செய்வார்களாம். அதுபோன்றவற்றுக்கும் செக்கிரேறியல் சேர்விஸ்களின் பங்களிப்பு / உதவிகள் தேவைப்படுமாம். அவ்வகை செக்கிரேறியல் குழுமங்களில் பணிபுரிபவர்களுக்கு பன்மொழியறிவும் Management / Bookeeping / Translations / interpretatons போன்றவற்றிலும் விஷயங்களைக் காலவிரயமின்றி முடித்துக்கொடுக்கவல்ல சாதுரியமும் இருக்கவேண்டும் என்று விபரித்த ஹன்னா, தானும் அப்படியாக Sophitha Consultings & Secretarial Service எனும் குழுமத்தின் பணிபுரிவதாகவும் சொன்னாள்.



சில வியாபார ஒப்பந்தங்கள் வெற்றிகரமானதாக அமையும்போது தங்கள் ஒத்துழைப்புக்கான ஸ்பெஷல் போனஸாக விலை உயர்ந்த பரிசுகளைக்கூடச் சில வணிகர்கள் தருவார்களாம்.

ஒருமுறை பெர்லின் Prenzlauerbergஇல் பல பிள்ளைகளையும் பங்குதாரர்களையுங் கொண்ட ஒரு யூதக் குடும்பத்துக்குச் சொந்தமான, காலிமனையாக இருந்த 4,600 சதுர மீட்டர் காணியை அவர்கள் குடும்பத்தின் ஒவ்வொருவருடனும் தனித்தனி சந்திப்பிணக்கங்களை ஏற்படுத்திப் பேசிச் சம்மதிக்கவைத்துCuxhavenஇன் ஒரு கட்டிட ஒப்பந்தக் குழுமத்துக்கு வாங்கிக் கொடுத்ததற்காக அக்குழுமம் தனிப்பட்டமுறையில் தனக்கு ஒரு லட்சம் ஜெர்மன் மார்க்குகளைப் பரிசளித்ததாகச் சொன்னாள். வேண்டிய இடத்தில் தன்பணியை வெற்றிகரமாகச் சாதிக்க தான் ஒரு தேர்ந்த நடிகையைப்போல நடிக்கவும் வேண்டியுமிருக்குமாம்.

யுஎஸ்ஏ நெவடாவில் லாஸ் வேகாஸ் போலவும், பிரேசிலின் சாவோ பவுலோ போலவும், ஸ்பெயினின் இபிஷா போலவும், ஜெர்மனியின் பெர்லின் நகரத்தின் கேளிக்கைகள் மிகுந்த இரவு வாழ்க்கை உலகப் பிரசித்தமானது. பெர்லினுக்கு வியாபார நிமித்தமாக வருபவர்களும் உல்லாசிகளாக இருந்துவிட்டால் அவர்கள் விரும்பும் கிளப்புகள், அருந்தகங்களன்ன , கேளிக்கை ஸ்தலங்களுக்கெல்லாம் அவர்களையும் இட்டுச்செல்ல வேண்டியுமிருக்குமாம்.

ஒருநாள் தமது செக்கிறரேறியல் சேர்விஸில் ஹொட்லைன் போன் அடித்ததாம். ஜெர்மனியின் தென்பகுதியான பேடன்வூர்ட்டம்பேர்க்கின் ஸ்டட்கார்ட் நகரிலிருந்தொரு புதுவாடிக்கையாளர் பேசினாராம். அவருக்கான வியாபாரம் / ஒப்பந்தம் எல்லாம் பேசியபிறகு தயங்கித் தயங்கி மெதுவான தொனியில் கேட்டாராம் "டோக்கியோவில், லாவோஸிலெல்லாம் செகிரடரீஸ் கட்டில் வரை ஒத்தாசையாக இருப்பார்கள், உங்கஸ்டாஃப் எப்படி ? அவர்களுடன் நான் செக்ஸ் வைத்துக்கொள்ள முடியுமா ?" என்றாராம்.

"அதெல்லாம் தனிமனிதர் சமாச்சாரம், உங்களிடையேயான ஊடாட்டத்தைப் பொறுத்த சாங்கியம், அதில் எல்லாம் குழுமத்தின் நிர்வாகம் தலையிடமுடியுமா" என்றதும் குதூகலத்தில் குதித்துப்போனை வைத்தாராம்.

'ஜீவன் எதுக்குப்பா கல்யாணாங்கட்டிறான்... அதுதானே நிரந்தரமாய் ஒருத்தியை வைத்திருக்கிறானே' என்று நட்புக்குழுவுக்குள் சிலர் என் காதுபடப் பேசினார்கள்.

சில நண்பர்களுக்கோ நானும் ஹன்னாவும் காதலிக்கிறோமா அல்லது ஏன் காதலிக்கவில்லை என்பது அவர்கள் கபாலத்தை உட்பக்கமாகக் குடைந்துகொண்டிருந்தது.

அதற்குள்ளும் இன்னும் நெருக்கமான நண்பர்கள் என்று வாய்த்தவர்கள் என்மீதான கரிசனை மீறி, "அடே... நீயொரு கூத்தியோட குடியிருக்கிறியாமே... செய்திகள் வருகுது உணமையாடா, உன்னுடைய பெயர் கெட்டு போகாதா" என்றெல்லாம் அனுதாபத்தைச் சொரிந்ததோடு, "உனக்கு யாரும் பெண்தர மாட்டார்கள்" என்றெல்லாம் பயமுறுத்தினர், ஏதோ நான் யார் வீட்டிலோ போய், 'உங்க பெண்ணைக் கொடுங்க' என்று முட்டிபோட்டு நிற்பதைப்போல.

இவ்வாறெல்லாம் என் நட்புப் பிசாசுகள் ஹன்னாவை என் வைப்பாட்டியே என்று குறைமதிப்பீடு செய்வதற்கு அவள் பண்ணும் இந்த விவகாரமான தொழிலும் ஒரு காரணம்.

ஒரு இரவு சுரங்கத் தொடாரியில் என் எதிரில் அமர்ந்திருந்த என்னைவிடப் பத்து வயதாவது அதிகமாக இருக்கக்கூடிய பெண்ணொருத்தி என்னிடம் உரிமையெடுத்துக்கொண்டு, "மெஸுயூ... எதுவரை பயணம்" என்றாள்.

'மோரிட்ஸ்பிளாட்ஸ்' என்று நான் இறங்க வேண்டிய தரிப்பைச் சொன்னேன்.

"அப்படியே... அதிலிறங்கி இருவரும் காற்றாட நடந்துபோய் ஒரு அருந்தகத்துக்குப் போவோமா.." என்றாள்.

"அதுவும் அருமையான யோசனைதான்... அதற்கு நன்றி; ஆனால், அதுக்கான ஆயத்தத்தில் இன்றைக்கு நான் இல்லையே அம்மணி... மன்னிக்கணும்," என்றேன்.

"மெஸூயூ நிரம்பக் கூச்சப்படறாப்பல... பிறகு செக்ஸுக்கு என்ன செய்வீர்கள் ?" என்றாள் இயல்பாக.

'அந்நியர்களுடன் ஒருபோதும் இல்லை' என்று சொல்லத்தான் வந்தது, எதுக்கு அவளை நோகடிப்பானென்று பிரயத்தனப்பட்டு விழுங்கிக்கொண்டேன்.

அருகலாக அமையும் இவ்வாறான சந்தர்ப்பங்களில் உள்ளூர '..ம்ம் எனக்கும் பெண்களால் விரும்பக்கூடிய ஒரு தோற்றம் இருக்கு' என்பதாக ஒரு 'கெத்து' முளைத்துப் பின் தானே உதிர்ந்துவிடும். அன்றைக்கு சுரங்கத் தொடரியிலேற்பட்ட அனுபவத்தை ஹன்னாவிடம் விவரித்தேன்.

"அழகான பெண்ணை அறைக்குள்ள உன் கட்டில்லேயே படுக்கவைச்சிட்டு, இரவு முழுவதும் இடைகழியில் மடுப்புக் கட்டிலில் (விருந்தினர்களுக்கான) படுத்துத் தூங்கிய உன்னைப் பார்த்தபின்னதான் உனக்கு ஏதும் நரம்பியல் பிரச்சனை இருக்குமோவென்று முதல்ல யோசித்தன். மன்னிக்கவும், எந்த 'மெஸையா'வானாலும் அவர்களின் 'ஈர இரவுகளில்' வந்தணைக்கும் மோகினிகளிடமிருந்து தப்பமுடியாது என்கிறது உளவியல்."

"நான் ஒன்றும் விதிவிலக்கான 'ஏலியன்' கிடையாதே.. அவ்வப்போ புறவயமாகப் பார்த்து மோகித்த அப்ஸரஸ்கள் வரத்தான் செய்வார்கள்."

"அப்போ அவர்களை என்ன செய்வே... மோகிப்பியா போகிப்பியா விரட்டி விடுவியா.."

"அது கனவுதானே... எதுவும் என் கட்டுப்பாட்டிலிருக்காது. அவை ஒருவனின் ஆழ்மனது நெறிப்படுத்தும் நாடகங்கள், நானும் அங்கே ஒரு பார்வையாளனாகத்தான் இருப்பேன். பல பலமாதிரியும் அமையும் மாம்."

"எப்படி மனிதா உன் காமத்தை ஒளித்து வைக்கிறே... மனிதனுக்கு இயல்பாய் இருக்கிற காமத்தை ஒளித்து வைக்கவேண்டிய அவசியம் என்ன இருக்கு... உன் உறுப்புகளிலே ஒன்றும் பிரச்சனையில்லையே."

"உறுப்புகளுந்தேவைதான் மனுஷனுக்கு. ஆனால், காம இந்திரியங்களே என்னைக் கொண்டுலைக்க என் வழியைத் தீர்மானிக்க அனுமதிப்பதில்லை. அதால அவைதரும் உந்தல்கள், உசுப்பல்கள் இல்லாமலில்லை; ஆனால், எப்படியும் அவற்றை வென்றிடுவேனாக்கும்."

"உன் தத்துவச் சரடுகளாலே என்னை வறுத்தெடுக்காத... மெஸ்யூ, ஆளைவிடு" என்றுவிட்டு போய்ப் போய்ப் படுத்துக்கொண்டாள். ஹன்னா தன் படுக்கையறையை ஒருபோதும் தாளிடுவதில்லை.

தேனருவி என்று அவளுக்குப் பெயர். நம்மவூர்ப் பெண் ஒருத்தி, சுற்றுவழியில் என் உறவுக்குள்ளும் வருவாள். அப்போது மொஸ்கோவில் படித்துக் கொண்டிருந்தாள். அது அவர்களுக்கு கோடைகால செமஸ்டர் விடுமுறை. விடுமுறை காலங்களில் அநேகமான மொஸ்கோ, பெலாறுஸ், கிறீமியாவில் படிக்கும் மாணவர்கள் லண்டன், மான்செஸ்டர், கிளாஸ்கோவுக்கோ போய் ஏதாவது கியோஸ்க் / பூக்கடைகளில் / பதிப்பகங்களில் / அருந்தகங்களில் உதவியாளராக சில்லறை வேலைகள் செய்து, கொஞ்சம் பணம் சம்பாதிப்பார்கள். அப்படி அவளும் லண்டன் போகிற வழியில் இங்கே என்னிடம் 2 நாட்கள் தங்கிச் செல்வதற்காக வந்தாள். என்னிடமிருந்த வவுச்சர் ஒன்றைக்கொண்டு நான்தான் அவளுக்கு லண்டன் சென்று திரும்பிவர தொடரிச் சீட்டும் எடுத்துக் கொடுத்தேன். அவள் லண்டனுக்குப்போக முதநாள் இரவு ஹன்னா நம் எல்லோருக்குமாக கடல் உணவுகள் அனைத்தும்போட்டுப் 'பஸ்டா' சமைத்து அசத்தினாள்.

"ஒருத்தி என்னிடம் வந்திட்டாள் என்பதற்காக அவளிடம் நான் செக்ஸ் வைப்பதா?"

"உன் உள்ளாடை கட்டிலின் கீழ்க் கிடந்ததைப் பார்த்தபோது, சிறு சந்தேகம் வந்தாலும்... நீங்கள் செக்ஸ் வைத்துக்கொள்ளவில்லையென்பது எனக்குத் தெரியும்."

"மற்றவங்க அந்தரங்கத்தை வேவு பாக்கிறதும் இப்போ உன் வேலையா... காதுகளை என் அறைக்குள் எறிந்துவிட்டுத்தான் கிடந்தாயா?"

"மன்னிக்கவும் மெஸ்யூ,... உன் தனிப்பட்ட வாழ்க்கைக்குள் புகுந்து பார்க்கிற நோக்கம் எதுவும் எனக்கில்லை... பக்கத்து அறைக்குள் செக்ஸ் நடந்தால் குறைந்தபட்சம் பூனைகளின் அனுங்கல்போல ஹஸ்கியாய்க் கொஞ்சம் கீச்சுக்கள், சிணுங்கல்களாவது வந்திருந்திருக்குமே, அப்படி ஒன்றும் வராததுதான் அதிசயமாயிருந்திச்சு."

"ஓ... அல்லேலூயா. தூங்கும்போது நான் ஒருபோதும் உள்ளாடை அணிவதில்லை. உடல் உஷ்ணம் அதற்குள் எகிறி இரவை ஈரமாக்கிவிடும், அசௌகரியம். எப்போதும் அதைக் களைந்து தூர வீசிவிட்டுத்தான் தூங்குவேனாக்கும்."

"ஏன் கிடைக்கிற பெண்களோடகூட செக்ஸ் வைச்சுக்கிறேல்லயென்று ஏதேனும் விரதமா... நீ இறையியல் படிச்சு ஏதாவதொரு மிஷன்ல போய்ச் சேர்ந்திருக்கலாம், விரைவில பிஷொப்பாகியிருப்பாய்."

"ம்ம்ம்ம்... செய்திருக்கலாம், தோணலையே.."

"இப்போதும் லேட் ஆகல்ல."

"ம்ம்ம்... சிந்திக்கிறேன். இந்தியப் பெண்கள் புவிக்கோளத்தின் எந்தப் பரப்பில் வாழ்ந்தாலும்



ஒருத்தன் அவள்மேல் தன் புலனின்ப வேட்கையை காட்ட அனுமதிப்பாளாயின் அவள் அவனைத் தன் மனதில் புருஷனாகவே வரித்துக்கொண்டுவிடுவாள். ஒரு கூரைக்காக என்னைத்தேடி வருபவள் எனக்கான வெகுமதியல்ல. அவகுக்கேயான ஒரு தேகமும் இதயமும் உயிரும் சுயமுமுள்ள தனியன். 28 வயதுக் கிடாயன் நான் காமம் நிறைந்திருக்கேன் என்பதற்காக ஒரு இரவு ஒதுங்குவதற்காக வந்தவளிடம் என் காமத்தைவிழைவது அபத்தம், அவமானம்."

"வேடிக்கையாக உள்ளது."

"தேனருவி எனக்கானவளல்ல என்று தெரிந்தபோதும், நான் அவளை என் இச்சைக்கு வற்புறுத்தியிருந்தால் அது வல்லுறவு, ஒருவேளை நான் அவளை வல்லுறவு செய்திருந்தால் என்ன நீ செய்திருப்பே.."

"அதுக்கு அனுமதித்திருக்கமாட்டேன், 110 ஐ அழைத்திருப்பேன்... ஆனால், உன்னால அதெல்லாம் முடியாதென்பதும் எனக்குத் தெரியும்" என்றாள் இளக்காரமாகச் சிரித்தபடி.

"திருமணம் என்பது ஒவ்வொருவருக்கும் முக்கியமான விடயமல்லவா?"

"அவரவருக்கு இருக்கலாம். ஆனால், ஒவ்வொருவருக்கும் என்பது பொருத்தமாக இல்லை... உன்னிடம் ஈடுபாடு கொண்டுள்ள ஒருபெண் இதைக் கேட்டிருந்தாலும் உனது பதில் இதுதானா?"

"நான் வித்தியாசமான பதிலைச் சொல்லி யிருக்கக்கூடிய பெண்கள் எவரையும் இதுவரையில் சந்திக்கலையே."

"நிஜத்தைச் சொல்லு நீ எவள் மீதாவது எப்போதாவது காதல் வசப்பட்டிருக்கியா."

"சும்மா கொஞ்சம் அவ்வப்போ ஆசைப்பட்டிருக்கேன், அதைத்தான் காதல் என்று தீர்மானித்து ஒருபோதும் ஏமாந்ததில்லை.. நான் காதலிக்கக் கூடிய மாதிரிப் பெண் எவளையும் நான் இதுவரை சந்திக்கேல்லை... அதேபோல் நான் சந்தித்த எவளுக்கும் நான் காதலிக்க லாயக்கற்றவனாகவும் பட்டிருக்கலாமில்லையா.."

"பெண்ணொருத்தியின் அணுக்கத்தில் அவளது வாசனைக்குள் இருக்கும்போது அடிமனதில் விவரிக்க முடியாத அற்புதங்கள் நிகழ ஆரம்பித்துவிடும். அவள் வாசத்தோட படுத்தாலே போதுமென்று எத்தனையோ ஆண்கள் தம் தவிப்பை ஏக்கத்தை எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். அப்படியொன்றும் உனக்கு ஆவதில்லையா... ராத்திரிகளில, குளிரில, தனிமையிலகூட உனக்கு ஒரு பெண்கூட இருந்தால் நல்லாயிருக்குமேயென்று தோணாதா.. உன் வாசனைகூட என்னை அவ்வப்போ லேசாக அருட்டும் தெரியுமோ.."

"அருட்டும்னு.."

"கிளர்த்துறது.."

"நீ தசை ஆசையைச் சொல்றியா.."

"அது தசையை உரசிறது, கவ்வுறது, கடிக்கவிடுறது மட்டுமில்லே. அதுக்கு மேலயுமிருக்கு. சரி இப்போதைக்கான அர்த்தப்படுத்தல்ல 'தசை ஆசை'ன்னே வைப்போம்."

"சராசரி ஆண்கள் வாய்ப்புக் கிடைத்தவுடன் இனப்பெருக்கத்துக்கு, முயங்கலுக்குத் தயாராகிவிடுவார்கள்... அதெல்லாம் இங்கேயும் தாராளமாகவே உண்டு. இல்லேன்னே... அது படைப்புத் தவறென்றாகிடும்."

"அப்போ உன் வாழ்வில் காதல், திருமணம் இவற்றையெல்லாம் எவ்விடத்தில் வைத்திருக்கே"

"உனக்கு எங்களுடைய சமூகம் பற்றிக் குறைவாகத்தான் தெரியும். அங்கே ஒருவன் காதலித்து அதைக் கல்யாணம் வரையில் நகர்த்தி வருவதற்கிடையில் பல தடைகளைத் தாண்டி வரவேண்டும். புரியற மாதிரி மேலோட்டமாய்ச் சொல்றேன், கஷ்டமாயிருந்தால் வேறொரு சமயத்தில வைச்சுக்கலாம்."

"மேலோட்டமாய்த்தான் கொஞ்சம் சொல்லேன், புரிய முயற்சிக்கறேன்."

"முதல்ல... அங்கே ஜாதியென்று ஒரு பூதமிருக்கு; அதையடுத்து சமூகநிலை, உன் பாஷையில 'வர்க்கம்', எளிமையா சோஷியல் ஸ்டேடஸ் என்று இப்போதைக்கு வைச்சுப்போம். அழகு, கவர்ச்சி, கம்பீரம் தாண்டி முன் சொன்னதையெல்லாம் கணித்துத்தான் ஒரு பெண் காதலிக்கவே சம்மதிப்பா, உடன்படுவா. ஒரு பெண்ணோடு டேட்டிங் செய்த காலத்தில் என் அறை வரைக்கும் சம்மதித்து வந்தாள். அறையில் அவளது இசை ஈடுபாட்டை அறியவேண்டி எனக்குப் பிரியமான ஹிந்துஸ்தானி இசைத் தட்டொன்றை ஓடவிட்டபோது, 'இதை இன்னும் இரண்டு நிமிடங்கள் ஓடவிட்டாயானால் ஜன்னலைத் திறந்து வெளியே குதிப்பேன்' என்றாள்...

சிலர் காதலிப்பதில், காதலிக்கப்படுவதில் சந்தோஷம் கிடைக்கிறது என்கிறார்கள். சிலருக்கு அது ஒரு கண்ணாம்பூச்சி விளையாட்டாகவும் சமயத்தில் கால்கட்டாகவும் படுகிறது. 20 வயதில உதைபந்தைத் தூக்கிக்கொண்டு ஓடறவன் 60 வயதிலயும் அப்படியே ஓடிட முடியுமா... எல்லாம் ஒரு சீசனுக்கேற்ற விளையாட்டுக்கள் போலத்தான் காதலும்.

உடம்பு ஓயும் கட்டத்தில் இருக்கையில, 'அட இது துடிப்பின் உச்சத்தில் இருக்கும்போதே இதைவைச்சு இன்னுங்கொஞ்சம் விளையாடியிருக்கலாமே சுகிச்சிருக்கலாமே' என்கிற எண்ணம் வருமாம்."

"நீ சமபால் விரும்பியல்ல... ஒரு உலோகாயதவாதியுமில்லை என்று தெரியுது. ஆனால், அப்பப்ப ஒரு துறவி மாதிரிப் பேசற, யாருக்காகவோ ஒரு சாதுவின் வாழ்வை வாழுற ஒரு பாவனை உங்கிட்ட இருக்கு... யாருக்கோ அதிர்ச்சி அல்லது வியப்பு மதிப்பீட்டைத் தரவேண்டுமென்று வாழுற மாதிரியும் படுது. உனது தமிழ்ச் சமூகம் மூடுண்டது, கட்டுப்பாடுகள், ஜாதிகளன வரையறைகள் மிகுந்தது என்றெல்லாம் அப்பப்போ பூச்சாண்டியும் காட்டுறே.. ஆனால், அவை எதையும் கட்டுடைத்து வெளியேறும் தற்றுணிபில்லாத 'கோழை'யாகத்தான் நீயும் தெரிகிறாய். ஒரு 'இடியட்'டாக இல்லை; பொதுநிகர நிலைகளை விடுத்து விலகி நடக்கக்கூடிய கிளர்சிக்காரனாகவும் இல்லை. அப்போ நீ எந்த உயிரினத்தில் சேர்த்தி.." என்றாள்.

"நான் வாழ்க்கையை நேசிக்கிறேன்.. ஹன்னா." அப்படித்தான் எனக்குச் சொல்ல வந்தது.

"நீ சொல்றபடி ஒருவனால 20 வயதிலதான் உதைபந்தைத் தூக்கிக்கொண்டு ஓடலாம். நீ அதீதமாகக் கற்பனை செய்யும் வாழ்க்கையும் பிடிபடாமலே கனவாகக் கடந்துபோய்விடும். ஒரு ஓவியத்தைச் சிலகணங்கள் ரசிக்கலாமே தவிர அதன் பயன்பாட்டுக்கும் எல்லைகள் அமைந்திருக்கு, நீ நம்பும் இந்திரியங்களும் நெறிகளுங்கூட அப்படித்தான், பயன்படுத்தாத எதுவும் ஒருநாள் வீணாகிவிடும். ஒழுக்கம் சார்ந்த உன்னுடைய தத்துவத்தின் அலைவரிசை எனக்கு டியூன் ஆகுதில்லை மெஸ்யூ.."

ஹன்னா உணர்ச்சி வசப்படும்போது அவளது லேசான மாறுகண்கள் (நடிகைகளில் அமலா போல், ரஞ்ஜினிக்கு இருப்பதைப்போல்) துலக்கமாகப் புலப்படும். இப்போதும் அவை அழகாகப் புலப்பட்டன. திடுப்பென இருக்கையைவிட்டு எழுந்தவள் வேண்டுமென்றே மார்புகளை முன்தள்ளி, பிட்டத்தைப் பின்தள்ளி உடம்பைப் பக்கவாட்டில் எஸ்ஸாய் வளைத்து 'அலாதகம்' போலொரு சிருங்காரக்கரணம் (செக்ஸிபோஸ்) தந்துவிட்டுத் தன் அறைக்குள் நுழைந்தாள்.

"வாழ்க்கை முழுவதும் மறந்துபோகாதபடி அத்தனை பிணக்குகளையும் பிரச்சனைகளையும் அவளாகத் தந்துகொண்டிருப்பாள், கவனம்" என்று தத்துவக் கவிஞர் ஷினிசி சூஸூகியின் வரிகள் நினைவில் வந்தன.

நான் போய்த்தூங்கிவிட்டேன். என் அறைக்குள் ஹன்னாவுக்குப் பிரீதியான 'பிளாக் ஓபியம்' வாசனை திரவியம் வாசம் வந்தது, "உனக்கான பெண் நானில்லையென்று நினைக்கிறாய், ராஸ்கல்" என்று அவள் சொல்வதும் கேட்டது. பின் கட்டிலின் விளிம்பில் யாரோ அமர்வதைப்போலொரு மென்னதிர்வலை படர்வதான உணர்வு. திடுக்கிட்டெழுந்து பார்த்தேன், அப்படி எவரது சலனத்தையும் காணேன். அனைத்தும் வெறும் பிரமை.

அதிகாலையில் எனக்கும் ஒரு நெஸ்காஃபேயை நீட்டியபடி கேட்டாள்: "பொன்ஜோர், மெஸ்யூ... இந்த மே 06ஆம் தேதி உனக்குப் பணியில விடுப்பு எடுக்க முடியுமா...?"

"அடடா... உனக்கில்லாத விடுப்பா. அன்று என்ன விஷேசமோ.."

"அன்று எனக்கும் லியோனுக்கும் பதிவுத் திருமணம், என்பக்கக் கல்யாண சாட்சி நீதான்."

ஹன்னா எதற்கும் பொய் பேசமாட்டாள். இருந்தும் நான் லியோனை யாரென்று உசாவவில்லை. அன்று ஹன்னாவை வீட்டின் பக்கக் கதவால் அணைத்தபடி டிராமில் கூட்டிச் சென்றவனாகவோ வேறொருவனாகவோ இருக்கலாம். ●

"பொ. கருணாகரமூர்த்தி" <karunah08@yahoo.com>

# வாழைகளின் சொல்லாத வாழ்க்கை

**வைதீஸ்வரன்**



பூங்காவின் புல்வெளியிடையில்
வாழைக் கூட்டங்கள்
வழக்கமான நண்பர்களைப் போல்
கூடி நிற்கின்றன எப்போதும்..

காற்றடிக்கும் அந்திவேளைகளில்
சலசலப்புடன் சம்பாஷிக்கின்றன அன்றாட நடப்புகளை.
ஆலாபனை செய்கின்றன அவ்வப்போது
தலையை பலவிதமாய் சாய்த்து.
அக்கறையுடன் சில முதிர்ந்தவைகள்
மற்றதின் துக்கமறிந்து இலைகளால்
கவலைகளைத் துடைத்து விடுகின்றன.

பொதுவில் எல்லாம் பச்சையாக இருந்தாலும்
தங்களின் சிறு சிறு நிற பேதங்களை இயல்பாக
ஒப்புக்கொண்டு உரசிக் கொள்ளும் பெருங்குணம்

வினோதமாக உச்சிப்பகலில் சலனமற்று
உறக்கமும் தியானமும் குழம்பிய காலத்தில் நிற்கின்றன!

ஆனாலும் அவ்வப்போது
அன்புத் துடிப்புடன்
அணில்கள் மேலேறிக் குதிக்கும்
குறும்புகள்
மௌனத்தை கலைக்கும்
சுகமான தொந்தரவுகள்.

நாள்தோறும் கூடி நிற்பது
ஓரிடமென்றாலும்
பார்வைக்குப் பார்வை நடப்பவருக்கு
இடம்பெயர்ந்து காட்சியளிக்கும் மாயவிளையாட்டு.
காலத்தின் பேய்த்தனமான பலாத்காரங்களால்
அத்தனையும் முண்டமாகி முகம் கிழிந்து
வாயற்றுப் பேச்சற்று அர்த்தமற்று குலைந்து போகும்
சோகம் அளவிடமுடியாதது.
இல்லாமற் போன அதன் வெளியில்
இன்னும் ஈரமாக மொழியற்று அலையும்
அதன் அருவங்கள்..
உன்னிப்பான ஒருவனால் கண்டுகொள்ள முடியும்

நிழலற்றுப் போன அதன் நிர்க்கதியில்
ஊரற்றுப் போன உயிர்களின் கூக்குரலைக்
கேட்க முடியும். ●

**வைதீஸ்வரன்** <vydheesw@yahoo.com>

# கிருஷ்ணார் பணம்

**விட்டல்ராவ்**

என்னுடைய அம்மா அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்த வார்த்தை அது. யாருக்காவது பணம் கடனோ அல்லது வேறு எதாவது பொருளையோ இரவல் தந்திருப்போம். எதுவுமே திரும்பியே வராத பட்சத்தில் அம்மா கடைசியாகப் போட்டு 'குடம் உடைக்கும்' சொல் அது, "கிருஷ்ணார்பணம்". குலாம் காதருக்கும் கோகலாஷ்டமிக்கும் சம்பந்தம் இருக்குமேயானால், அம்மா சொல்லும் அந்த கிருஷ்ணார் பணத்துக்கும் சென்னைத் தொலைப்பேசியின் கிருஷ்ணன் என்பவனுக்கும் ஒரு சம்பந்தம் இருந்தே இருக்கிறது. எவரிடமாவது சீட்டு சேர்ந்திருப்போம், மாதம் நூறு, ஐநூறென்று ஒருநாள் எல்லார் பணத்தையும் சுருட்டிக்கொண்டு சீட்டு நடத்துபவன் தலைமறைவாகிவிடுவான். அம்மா மனம் நொந்துதான் அந்த வார்த்தையைக் கூறுவாள்.

நம்முடைய கிருஷ்ணன் சென்னைத் தொலைப்பேசியில் மூத்த இயக்குநர்களில் ஒருவன். ஜெகஜ்ஜாலன் என்று இனிமையோடு அழைக்கப்பட்டவன். கிருஷ்ணனின் தமக்கைக் கணவர் பெரியத் தோல் வியாபாரி என்ற தகவலை ஒரு நாள் கூறிய அவன் தனது திருவிளையாட்டைத் தொடங்கினான்.

"வாங்கப்பா, செருப்புத் தச்சிக்கலாம்," என எங்கள் மூவரைப் பார்த்துச் சொன்னான் கிருஷ்ணன். நாங்கள் மூவரென்பது, நான் - சிவா - மற்றும் உபகாரம்.

"என்னடா சொல்றே?" என்றேன் விளங்காமல்.

"செருப்புத் தச்சிக்கங்கடா, தோல் நா தர்ரேன்", என்றான் கிருஷ்ணன்.



அவனுடைய தமக்கைக் கணவரின் தோல் கிடங்கிலிருந்து எடுத்து வந்ததாய்க் கூறி பதப்படுத்தப்பட்ட ஒருபுறம் இருண்ட, காபி வண்ணமேற்றிய உயர் ரக தோலைக் காட்டினான்.

"எத்தனை செருப்பாகும்?, என்றான் உபகாரம்.

"ஒனக்கு எத்தினி வேணும்? ரெண்டு போதுமா?"

"ஆளுக்கு ரெண்டு வருமா?"

"தாராளமா வரும். வாங்க போலாம்" என்று கூறிவிட்டு எங்களை அழைத்துக்கொண்டு தோலோடு வந்தான். சாலையோரத்து மரத்தடியில் ஒரு செருப்புத் தொழிலாள் இருப்பான். அவ்வப்போது செருப்பில் வார் அறுந்து போகும்போது அவனுடைய சேவையைப் பெற்றுக்கொண்டதில் நல்ல பழக்கம்.

"சின்னு, இவங்க மூணு பேருக்கும் ஆளுக்கு ரெண்டு செருப்பு வர்ரமாதிரி இந்தத் தோலில அளவு எடுத்துக்க. தோல் என்னிது, சரி, அடிலே இன்னா போடுவ?" என்று கேட்டுவிட்டு தோலை தொழிலாளி சின்னுவிடம் கொடுத்தான் கிருஷ்ணன்.

"மூணு பேருக்கு ரண்டு ரண்டு செருப்பு ஆவும், அப்பவும் தோலு மீதியாவும். எட்டு தச்சிரூட்டமா, நல்ல தோலு", என்றான் சின்னு.

"சரி, அடியில இன்னா போடுவ?"

"தோலே வச்சிரட்டா?"

"சீக்கிரம் தேஞ்சிடுமே. நம்ப எக்ஸ்சேஞ்சு தரையெல்லாம் வழுக்கும்."

"அப்ப, ஏரோப்பிளேன் டயர் வச்சிரட்டா."

"ரொம்ப வெயிட்டாயிருக்குமே?"

"செஞ்சி தர்ரேன் பாரு. அப்பிடியே சும்மா பேப்பர் மாதிரி மெல்லிசா ரேக்கெடுத்து வச்சித் தக்கிறேம், மழைக்குத் தாங்கும்."

"சரி, செய்யி," அவன் இவ்வளவு ஆகுமென்றான்.

"அட்வான்ஸ் எதனாச்சி குடுத்துட்டுப் போ."

கிருஷ்ணன் ஒருகணம் யோசித்துவிட்டு, "டேய், ஆளுக்கு அம்பது ரூபா குடுங்கடா, அட்வான்சு" என்றான் எங்களிடம்!



அப்படியே செய்தோம். உயர்ந்த தோல், மலிவான விலையில் இரண்டு செருப்பு கிடைப்பதில் ஏகப்பட்ட குஷி மூவருக்கும்.

"எப்ப ரெடியாவும்?"

"ரண்டு வாரமாவும்."

மறு வாரம் அந்த செருப்புத் தைப்பவர் கடை போடவில்லை. இன்னொரு வாரமும் கழிந்தது அவர் கடை போடவில்லை. இப்படியாக ஒரு மாதமும் கடந்துவிட்டது.

"என்னடா கிருஷ்ணா? அவ்வளவுதானா எள்ளா?"

"ஏன் எள்ளு," அதற்கு மேல் சரியாக எதையும் பேசாமல் கிருஷ்ணன் நழுவினான்.

இது நடந்து ஒரு வருடம் கழித்து, ஆவடியில் எதற்கோ போயிருந்தபோது, ரெயில்வே லெவல் கிராசிங்கை ஒட்டி செருப்புத் தைத்துக் கொண்டிருந்தான் சின்னு. நன்றாகப் பார்த்தேன், சின்னுவேதான்.

"என்னைத் தெரியுதா?" என்று கேட்டேன். "தெரியுது" என்றான்.

"செருப்புத் தைக்க தோல் குடுத்தோம். அட்வான்சும் குடுத்தோம். இதுதானா நாணயம்?" என்று ஆத்திரத்தோடு கேட்டேன்.

"அவருதான், வேணாம்னு சொல்லி தோல திருப்பி வாங்கிட்டுப் போயிட்டாரு, சொல்லலியா. அட்வான்சையும் கேட்டு வாங்கிகிட்டு போயிட்டாரே, எதையுமே சொல்லல்லியா, டுபாகூரா?" என்றான் சின்னு.

"சரி நீ ஏன் அங்க கடை போடல்லே?"

"அதான் இங்க போட்டிருக்கனே, அங்கெல்லாம் கடை போடக்கூடாதினுட்டாங்க."

கிருஷ்ணன் அந்த சமயம் மைலாப்பூர் தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுக்கு மாற்றலாகி போயிருந்தான். போனில் பிடிக்க முடியவில்லை. உபகாரம் ஜே.இ. பரீட்சை பாஸ் செய்து திருவனந்தபுரம் பயிற்சி மையத்துக்கு போய்விட்ட நிலையில் நானும் சிவாவும் முகத்தை முகத்தைப் பார்த்துக் கொண்டோம். 'கிருஷ்ணார்ப் பணம்', என்று நானும் அம்மாவைப் போலவே மனதுக்குள் சொல்லிக்கொண்டேன்.

அப்போதெல்லாம் 24 மணி நேரமும் தொலைப்பேசி தொடர்பகங்கள் விழித்துக்கொண்டிருக்கும். எனவே, ஊழியர்கள் பல்வேறு ஷிஃப்டுகளில் வரவழைக்கப்பட்டு பணியிலமர்வார்கள். அதற்கென்று டூட்டி சார்ட் வாரா வாரம் போடுவார்கள். காலை 7 மணி, 8 மணி, 9

மணி, 10, 11, 1.30 மணி ஷிப்டு, 16.40 (4-40) மணி மற்றும் 12 மணி (0 மணி) ஷிப்டுகள் இருக்கும். ரிலே ரேஸ் மாதிரி ஒரு குறிப்பிட்ட ஷிப்டில் பணியாற்றுபவரை, அடுத்த ஷிப்டுகாரர் வந்து எழுந்து போக விடுவிப்பார். 7 மணிக்காரரை 9 மணிக்காரர் வந்து சிற்றுண்டிக்கு அனுப்பவேண்டும்.

இப்படியாக இந்த ஷிப்டு முறை பணியில் நிறைய சாதக பாதகமிருக்கும். மாலை 16.30 மணி ஷிப்டு மற்றும் இரவு 12 மணி ஷிப்டுகாரர்களுக்கு கணிசமான பகல் நேரம் கிடைப்பதால் சொந்த வேலைகளைச் செய்து முடிக்க வசதியாயிருக்கும். அதேபோல காலை 7 மணி ஷிப்டுகாரரும் மதியத்துக்கு மேல் அவகாசம் கிடைத்தவராய் தனது சொந்த வேலைகளை செய்து கொள்ளமுடியும். காலை 7 மணிகாரர் தன்னை வீட்டுக்கு அனுப்ப வரவேண்டிய 13.30 மணி ஷிப்டுகாரரிடம் முதல் நாளே சொல்லி வைப்பார். “நாளையிலேந்து நீ கொஞ்சம் முன்னாடி வந்து என்னை ரிலீவ் பண்ணிடு. ஒரு மணிக்கு வந்திடு.” இல்லாவிடில் இவர் ஒண்ணரை மணி வரை இருக்க வேண்டும். ஒண்ணரை மணி டூட்டிக்காரர் இரவு எட்டு வரை இருக்க வேண்டும். இவரை நாலரை மணி டூட்டிக்காரர் (16.30) ஒரேயடியாக ஏழு மணிக்கு வந்து அனுப்பி விடுவார். இரவு 12 மணி வரை டூட்டி பார்க்கும் நாலரை மணிகாரரை ‘0’ மணி டூட்டிக்கார (2 மணி டூட்டி) பத்து மணிக்கு வந்து ரிலீவ் செய்து விடுவார்.

இந்த விதமாக ஒருவருக்கொருவர் அனுசரித்து பணியிலமர்ந்து, நிர்வாகத்துக்கும் வாடிக்கையாளர்களுக்கும் எவ்வித இடைஞ்சலுமின்றி தத்தம் சேவையை - கடமையை செய்துகொண்டு போன சுமுகமான நிலைமை நீண்டகாலமாகவே தொலைப்பேசி இலாகாவில் நிலவி வந்தது. இந்த ‘அட்ஜஸ்ட்மெண்ட்’டும் அலுவலகங்களிலும் ஷிப்டு முறை இருக்குமிடங்களில் நடைமுறையிலிருந்து வந்து ஒன்று. அத்தோடு ஒரு ஷிப்டிலிருக்கும் ஊழியர் தம் சௌகரியத்துக்காக வேறொரு ஷிப்டில் செய்ய அந்த வேறொரு ஷிப்டில் உள்ளவரோடு டூட்டியை மாற்றிக்கொள்ளும் வசதியும் தொலைப்பேசி இலாகாவிலிருந்தது. இதற்கென்றே Duty Change Register என்று ஒரு பதிவேடும் வைக்கப்பட்டிருந்தது. அந்தந்த பிரிவின் சூப்பர்வைசர்கள் அதைப் பார்த்து அனுமதித்து வைப்பார்கள்.

பெண் ஊழியர்களில், தொடர்ந்து இரவு டூட்டி மாற்றிக்கொண்டு இரவுப் பணியே பார்த்து, பகலில் கல்லூரியில் சேர்ந்து தம் படிப்பைத் தொடர்ந்து பட்டம் பெற்றவர்கள் உண்டு. இந்த வசதியில் தான் நானும் இரண்டாண்டு ஓவிய செர்டிபிகேட்டு படிப்பு - பயிற்சியை முடித்தேன். இந்த வசதியில் ஓராண்டுக் காலம் இரவு டூட்டியே பார்த்து, மத்திய அரசின் வீடு கட்டும் கடன் பெற்று, ஆதம்பாக்கத்தில் பகலெல்லாம் வீடு கட்டும் பணியில் கவனம் செலுத்தி, நான் வீட்டைக் கட்டி முடித்தேன்.

குறிப்பிட்ட நாளன்று எனக்கு 16.30 மணி டூட்டி. எங்களுக்குள் ஒப்பந்தப்படி என்னை இரவு 12 மணிக்கு வருபவர் இரவு 10க்கே வந்து போக விடவேண்டும். நான் கடைசி பஸ், ரயில்களைப் பிடித்து வீட்டைச் சேர பதினோறு மணியாகும். பரவாயில்லை.

அன்று என்னை ரிலீவ் செய்யவேண்டிய இரவு பன்னிரண்டு மணி டூட்டிக்காரர் மாணிக்கம். பத்தாயிற்று வரவில்லை. நேரத்துக்குச் சரியாக வந்துவிடக்கூடியவர். பதினொன்று ஆயிற்று, ஆளைக் காணோம். தொலைப்பேசி அழைப்புமில்லை. ஏதாவது காரணமிருந்தால் உடனே தொடர்புகொண்டு சொல்லிவிடுவார். நேர்மைக்கும் நாணயத்துக்கும் பேர் பெற்றவர். நான் வீட்டுக்குப் போய்த்தான் சாப்பாடு. இனிமேல் போகபேருந்து இருக்காது. பன்னிரண்டுக்கு கடைசி மின்சார ரயில். நல்ல ஓட்டலும் இனிமேல் இருக்காது. மணி பதினொன்றரை, மேஜை மீதுள்ள தொலைப்பேசி மணியடிக்கப் போய் எடுத்தால், மாணிக்கம்தான்.

“என்னாச்சி?” என்றேன்.

“வந்து சொல்றேன். வந்திட்டேயிருக்கேன். கவலைப்படாதீங்க. உங்களுக்கு சப்பாத்தி குருமா வாழைப்பழம் கொண்டு வர்றேன்” என்றார்.

“ஏன் லேட்?”

“நடந்துதான் வர்ரேன்.”

“சைக்கிள் என்னாச்சி?”

“எல்லாம் வந்து சொல்றேன். கிருஷ்ணன் என்னை மார்வாடிகிட்டே அடகு வைச்சிட்டான்.”

“ஹா, என்ன சொன்னீங்க?”

எல்லாவற்றையும் வந்து சொல்லுவதாய்க் கூறிவிட்டு அழைப்பை துண்டித்தார் மாணிக்கம்.

பன்னிரெண்டு மணிக்கு வந்து நின்றார்.

“முதல்லே சாப்பிடுங்க, அப்புறம் பேசலாம்” என்றார். அவர் மிக நல்ல மனிதர். குலுக்குச் சீட்டு ஏலச்சீட்டு நடத்துவார். பொங்கல் விழா, ஆயுத பூஜைகள் நடத்தபொறுப்பேற்பார்.

சாப்பிட்டானதும் அவருக்கு எதிரில் அமர்ந்தேன். அவர் நடந்ததைச் சொல்லத் தொடங்கினார்.

கிருஷ்ணன் தன் மனைவியின் சங்கிலி கம்மல்களை மார்வாடி ஒருவரிடம் எப்போதோ அடகு வைத்திருந்தான். காலாவதியாகி விடவே மார்வாடி நோட்டீஸ் அனுப்பிவிட்டான். இந்த சமயம் ஹைதராபாத்தில் அவன் மனைவியின் தங்கைக்குக்

கல்யாணம். போயே தீரவேண்டும். இப்படி மூளியாய் போய் நிற்கமுடியாது. நகையை மீட்கவேண்டும்.

"மாணிக்கம் நகைய மூட்னாத்தான் கல்யாணத்துக்குப் போவமுடியும். மச்சினி கல்யாணத்துக்குப் போவல்லேனா ரெண்டு பேரும் தூக்குப் போட்டுக்கணும்."

"எவ்ளோக்கு வச்சே? ரசீது எடு?"

கிருஷ்ணன் பவ்வியமாக ரசீசை எடுத்து நீட்டினான். வட்டியும் சேர்த்து மூவாயிரம் ரூபாய்.

"என் வைஃபு ஆயிரம் வச்சிருக்கா. நீ ரெண்டா யிரம் குடு. ஒரு குடும்பத்த தற்கொலையிலிருந்து காப்பாத்தின புண்ணியம் ஒனக்கிருக்கட்டும்."

"இப்ப கைல ஆயிரந்தானே இருக்கு."

"சரி, குடு."

மாணிக்கத்தை அழைத்துக்கொண்டு கிருஷ்ணன் மார்வாடிக் கடைக்குப் போகையில் இரவு ஒன்பது. மார்வாடியிடம் மிடுக்காகப் பேசினான் கிருஷ்ணன்.

"யோவ் சேட்டு, இந்தா ஆயிரம் ரூபா. வச்சிகிட்டு நகைங்கள குடுத்துடு. வீட்டுக்குப் போய் மிஸஸ் கிட்ட நகைய காட்டணும். காட்டினாதான் பாக்கிப் பணத்த அவ தருவா. போயிட்டு அரை அவர்ல வர்ரேன்."

"எப்படி நம்பரது?" என்றார் மார்வாடி.

"தோ இவரு எங்ககூட ஒர்க் பண்றாரு, மாணிக்கம். இவரு நா வர்ர வரை இருப்பாரு, சரியா?"

மாணிக்கம் திடுக்கிட்டுப்போய், "யோவ், யோவ், என்னய்யா சொன்னே?" என்றார்.

"மாணிக்கம் மாணிக்கம், என் தங்கமில்ல; தோ, போயிட்டு ஓடியாந்திடறேன்."

மார்வாடி, மாணிக்கத்தை கீழே மேலே பார்த்தார். பெரிய வாட்சும் இரண்டு விரல்களில் பெரிய மோதிரமும் அணிந்திருப்பார் மாணிக்கம்.

"சரி போயிட்டு சீக்கிரம் வாய்யா. போய் நாலரை மணி டூட்டிக்காரனை ரிலீவ் பண்ணனும்."

"சீக்கிடம் வரணும்னா, சைக்கிள் குடு."

மாணிக்கம் தன் சைக்கிள் சாவியைக் கொடுத்தார்.

இரவு பத்து. மாணிக்கம் புழு நெளிந்தார். கிருஷ்ணன் வரவில்லை. மார்வாடி திட்டத் தொடங்கினான். மாணிக்கத்தைப் போலீசில் ஒப்படைப்பதாய் மிரட்டினான்.

"தோ வர்ரேனு சொல்லிட்டு, ஆயிர ரூவாவ குடுத்திட்டு நகையெல்லாம் மூட்கினு ஓடிட்டான். கடை மூடணும். ஸ்டேஷனுக்கு வா போலாம்."

மாணிக்கம் முள் மேல் அமர்ந்திருந்தார்.

மார்வாடி ஒரு யோசனை சொன்னார்.

"சரி, மோதரங்களையும் வாட்சையும் கழட்டி வச்சிட்டு நீ போய்க்கலாம் சார்."

மாணிக்கம் தன் இரு மோதிரங்களையும் கைக்கடிகாரத்தையும் கழட்டி மார்வாடியிடம் தந்து ரசீது ஒன்று போட்டு வாங்கிக்கொண்டு ஓட்டமும் நடையுமாய் கிருஷ்ணன் வீட்டுக்கு போய்ப் பார்த்தால், வீடு பூட்டப்பட்டுக் கிடந்தது. பக்கத்துச் சலவைக் கடையில் இஸ்திரி வேலை நடந்தபடியே இருந்தது. விசாரித்ததில் கிருஷ்ணன் குடும்பத்தோடு டாக்சியில் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போய்விட்டதாய்க் கூறினார்கள்.

எனக்குச் சாப்பிட வாங்கிக்கொண்டு அபிராமபுரத் திலிருந்து லஸ் சர்ச் சாலையிலிருந்த தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுக்கு நடந்தே வந்து சேர்ந்தார் மாணிக்கம்.

ஒரு வாரம் கழித்து கிருஷ்ணன் மொட்டைத் தலையோடு டூட்டியில் சேர்ந்தான். பவ்யமாகச் சிறு தட்டு ஒன்றில் திருப்பதி லட்டு ஒன்றை உதிர்த்து, குங்குமத்தோடு, அப்போது ஷிப்டிலிருந்த அனைவருக்கும் தட்டை நீட்டி பிரசாதத்தை வாங்கிக்கொள்ளச் செய்ததோடு தன்னைப் பற்றிய கருத்தையும் சற்று தணியச் செய்தான்.

"மாணிக்கண்ணே, ரொம்ப மன்னிக்கணும். வேணுமானா அடிச்சிடு என்னை. நாளைக்கு எனக்கு சொசைட்டி லோன் கிடைக்கும். மொத்த காசையு வாங்கிக்க" என்றான் தணிவாக கிருஷ்ணன்.

"அது நாளைக்கி கதை. இப்ப முக்கியம் என் சைக்கிள்."

"ஹைதராபாத் போயிட்டு திருப்பதிக்கு போய் தரிசனம் பண்ணிட்டு வர காசு பத்தலேனு ஒஞ் சைக்கிளத்தான் வச்சி பணம் வாங்கிட்டுப் போனேன். இருநூறுதான். அதையும் சேத்தி மொத்தமா நாளைக்கு தீத்தர்ரேன். வாங்கிக்கிவியாம். இப்ப சைக்கிளுக்கு மூட்றதுக்கு இருநூறு ரூபா குடு. நாளைக்கு எல்லாத்தையும் பைசல் பண்ணிடறேன்," என்றார்.

வேறு வழியின்றி கிருஷ்ணனின் முகத்தையே கவலையோடு பார்த்தபடி மாணிக்கம் இருநூறு ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டு, "சைக்கிள் இண்ணிக்கே வந்தாவணும்," என்றார்.

"ஆமாமா, இன்னிக்கே கொண்டாந்திடறேன்", என்றான் கிருஷ்ணன்.

(தொடரும்)

# அமீர்

பால்ராஜ் கென்னடி

ஓவியம்: எபிநேசர்

“பேரு என்ன?”

“எங்கிருந்து வருகிறாய்?”

“எங்கே போகிறாய்?”

இந்த மூன்று கேள்விகளுக்குமே பதிலில்லாத ஒரு மனுஷன் அமீர். இந்த பெயரும் அவனுக்கு யார் வைத்தது என்று தெரியவில்லை. யாரோ ஒருவர் அவனை அப்படி கூப்பிட, அதுவே அவனது பெயராகிப் போய்விட்டது.

வயது என்னவென்று தெரியவில்லை. உருவத்தைப் பார்த்து நாமாக உத்தேசமாக சொல்லலாமென்றால், சுமார் இருபத்தைந்து இருக்கலாம். நல்ல கனத்த சரீரம். சராசரி ஐந்தரை அடி உயரம். மாநிறம். நல்ல அகலமான முகம், இடுங்கின கண்கள், பரந்த மூக்கு, தடித்த உதடுகள். இரண்டு, மூன்று வாரம் சவரம் செய்யப்படாத மீசை மற்றும் தாடி. மிகவும் சிறிதாக வளர்ந்துள்ள தலைமுடி. தலைமுடி, மீசை, தாடி எல்லாம் கறுப்பும் வெள்ளையுமாக ஒரே சீராக வெட்டப்படாமல் காணப்படும்.

சற்று மன வளர்ச்சி குன்றியவன். ஒரு சிறு பையன்போலத்தான் அவனுடைய செயல்பாடுகள். எப்போதும் வாய் சற்று திறந்தே இருக்கும். வாயில் எச்சில் ஊறிக்கொண்டே இருக்கும். அவ்வப்போது பக்கவாட்டில் வடியும். அதைப் பற்றிய சிந்தையே அமீருக்கு இருக்காது.



திடீரென்று ஒரு நாள், எங்கள் காலனிக்கு வந்தான். காலனியில் சுமார் 400 குடும்பங்கள் இருப்போம். ரஞ்சிதம் டீச்சர் வீட்டில் வந்து தஞ்சமடைந்தான். அவர்களுக்கும் அவனுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. எப்படி அவர்கள் வீட்டிற்கு வந்தான், எப்படி அங்கு தஞ்சமடைந்தான் என்று யாருக்கும் தெரியாது. அவர்கள் வீட்டில் 6 பையன்கள் இருந்தார்கள். அதனால் ஒருவேளை அங்கு தஞ்சமடைந்திருக்கலாம்.

அவர்கள் வீட்டின் முன்வராந்தாவில் இரவு நேரங்களில் படுத்துக்கொள்வான். சரியாகப் பேச வராது. திக்கி, திக்கி பேசுவான். ஒரு வாக்கியத்தில் இரண்டு, மூன்று வார்த்தைகளை மாத்திரமே அவனால் பேச முடியும். வாயிலிருந்து சத்தம் வராது, தொண்டையிலிருந்து மிகவும் கஷ்டப்பட்டு வார்த்தையும் காற்றும் வரும். சில சமயங்களில் அப்படி காற்றுபோல வரும் சத்தம், விசில் ஒன்று தொண்டையில் அடைபட்டுக்கொண்டு அதிலிருந்து வருகிற சத்தம்போல இருக்கும். சில பேரால் மாத்திரமே அவன் பேசுவதை முழுவதுமாகப் புரிந்துகொள்ள முடியும். ஆனாலும், அவன் வயது வித்தியாசம் இல்லாமல் எல்லோரிடமும் பேசுவான். பேச்சைக் காட்டிலும் சைகைகள்தான் அதிகமாக இருக்கும். எல்லோருமே அவனுடன் ஆர்வத்துடன் பேசுவார்கள். எல்லோரிடமும் பிரியமாய் எப்போதும் சிரித்த முகத்துடன் இருப்பான்.

யார் எந்த வேலையைக் கொடுத்தாலும் சலிக்காமல், எப்படிப்பட்ட கடினமான வேலையாக இருந்தாலும் தயங்காமல் செய்வான். கடினமாக உழைப்பான். அவன் ஓய்வெடுத்ததையோ தூங்கினதையோ நாங்கள் பார்த்ததில்லை. யார் வீட்டில் வேலையென்று கூப்பிட்டாலும் உடனே சென்று விடுவான். அவன் மறுப்பு சொன்னதோ பிறகு வருகிறேன் என்று தள்ளிப் போட்டதோ கிடையாது.



இந்த வேலைக்கு இவ்வளவு கூலி என்று அவன் கேட்டது கிடையாது. அவனுக்கு யோசிக்கவோ கேட்கவோ தெரியாது. வேலை வாங்கியவர்கள் எவ்வளவு கொடுக்கிறார்களோ அதை சந்தோஷமாக, சிரித்த முகத்துடன் வாங்கிக்கொள்வான். என்ன கொடுத்தாலும் அதை சந்தோஷமாக வாங்கி வயிறாற சாப்பிடுவான்.

ஒரு வீட்டில், இரண்டு, மூன்று நாட்களுக்கு தோட்ட வேலை கொடுத்திருப்பார்கள். அதை அமீர் செய்து கொண்டிருப்பான். மற்றொரு வீட்டிலிருந்து வந்து, அவனை மற்றொரு வேலைக்குக் கூப்பிடுவார்கள். உடனே அமீர் ஒரு குழந்தையைப்போல அவர்களை அவன் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறவர்களிடத்திற்கு அழைத்து வந்து, விவரத்தை சொல்லச் சொல்வான். அவர்களிருவரும் தங்களுக்குள் பேசி, ஒரு தீர்மானத்துக்கு வந்து, ஏற்கனவே அவனுக்கு வேலை கொடுத்தவர்கள், "போ" என்று சொன்னால்தான் போவான். அதுவும் அந்த வேலையை முடித்தவுடனே, இங்கு வந்து வேலையை தொடருவான். அவனிடம் ஏமாற்றுதல், தந்திரம், சாக்கு போக்கு இவையெல்லாம் இருந்ததே கிடையாது.

பள்ளிக்கூடம் முடிந்தவுடன், வீட்டிற்குப் போய் எங்கள் உடைகளை மாற்றிக் கொண்டு, தெருவில் விளையாட வந்து விடுவோம். 10, 15 பேர் சேர்ந்து விளையாடுவோம். பத்து வயதிலிருந்து பதினைந்து வயதுவரை இருப்போம்.

எங்களுடைய காலனியில் 'பேபாய்'என்று ஒரு அண்ணன் இருந்தார். நல்ல உயரம், கருமையான நிறம், நல்ல உடற்கட்டுடன் இருப்பார். அவருடைய பெற்றோருக்கு மூன்று மகன்கள். இவர் கடைசி மகன். அவருடைய அம்மா, அவர் கடைசி மகன் என்பதால் 'பேபி பாய்' என்று கூப்பிட்டிருக்கிறார். அதுவே பின்னாளில் 'பேபாய்' என்றாகிவிட்டது.

அவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். பெரிய விளையாட்டு வீரர். 'போல் வால்ட்' (தடியூன்றி தாண்டுதல் - நீண்ட கழியைப் பிடித்துக்கொண்டு, உயரத்தில் பொருத்தப்பட்டுள்ள ஒரு குறுக்குக் கம்பிக்குமேல் தவ்விக் குதித்தல்) என்ற குறிப்பிட்ட விளையாட்டில், தேசிய அளவில் விளையாடி பரிசுகளை வெல்பவர்.

அவருடைய வீட்டின் முன் வராந்தாவில், மரத்தினால் செய்யப்பட்ட நீள, நீளமான பெட்டிகள் இருக்கும். அந்த மரப்பெட்டிகளுக்குள் ஹாக்கி மட்டைகள், அந்த விளையாட்டிற்கான பந்துகள், கிரிக்கெட் மட்டைகள், கிரிக்கெட் ஸ்டெம்ப்புகள்,

பந்துகள், கால் பந்து, பேட்மிண்ட்டன் மட்டைகள், அதற்கான பந்துகள், நெட் என்று சகல விளையாட்டு பொருட்களும் இருக்கும்.

நாங்களெல்லாரும் மிகவும் சுதந்திரமாக, எங்களது சொந்த வீட்டிற்குள் போவதுபோல போய், எந்த விளையாட்டு விளையாட வேண்டுமோ அதற்கு தேவையான பொருட்களை எடுத்துக்கொண்டு வந்து விளையாடுவோம். பேபாய் அண்ணன், கல்லூரி முடிந்து வந்து, எங்களுடன் இணைந்து கொள்வார். ஒவ்வொரு விளையாட்டைக் குறித்தும் எங்களுக்குக் கற்றுக் கொடுப்பார்.

ஹாக்கி விளையாட்டில் எப்படி கோல் கீப்பர் நின்று, பந்தை தடுத்து விளையாட வேண்டுமென்று விளையாடி காண்பிப்பார். மற்ற விளையாட்டு வீரர்கள், எப்படி பந்தை லாவகமாகத் தட்டிக்கொண்டு போக வேண்டும், அதற்கான டெக்னிக் என்ன என்பதையெல்லாம் நுணுக்கமாகக் கற்றுக் கொடுப்பார். மற்ற விளையாட்டுகளையும் ஒவ்வொன்றாகக் கற்றுக் கொடுத்து, எங்களை விளையாட வைப்பார். இப்படி நடப்பதையெல்லாம், ஒரு சிறு குழந்தையைப்போல அமீர் உற்சாகத்தோடு வேடிக்கை பார்ப்பான்.

விளையாட்டெல்லாம் முடித்துவிட்டு, எல்லோரும் இளைப்பாறும்போது, நாங்கள் ஒவ்வொருவரும் எப்படியெல்லாம் விளையாடினோம் என்பதையும் அப்போது எங்கள் முக பாவங்கள் எப்படியெல்லாம் இருந்தது என்பதையும், அமீர், பலத்த செய்கைகளுடனும் பலவிதமான முகபாவங்களுடனும் அவனுடைய தட்டுத்தடுமாறின, தவணை வார்த்தைகளால் சொல்லி காண்பிப்பான்.

ஜெகன் என்ற பெயரை, 'ஜெ' என்று ஆரம்பித்து, சிறிது காற்று சத்தத்திற்குப் பிறகு 'கன்' என்று முடிப்பான். ஜெகன் எப்படி பேபாய் அண்ணனுடன் போராடி விளையாடினான் என்பதை, ஜெகனின் முகபாவங்களையெல்லாம் இவன் போக்கில் செய்து காண்பிப்பான். இப்படி ஒவ்வொருத்தரையும் சுட்டிக் காண்பித்து, அவர்கள் எப்படி விளையாடினார்கள் என்று விளையாடி காண்பிப்பான். ஆனால், அவனை விளையாட அழைத்தால், அது தனக்கு வராது என்பதுபோல மறுத்து விடுவான்.

ஒரு நாள், பேபாய் அண்ணன், நீச்சல் கற்றுக் கொடுப்பதற்காக எங்கள் எல்லோரையும் வயலுக்கு தண்ணீர் பாய்ச்சுவதற்கு என்றுள்ள கிணற்றுக்கு அழைத்துச் சென்றார். அமீரும் எங்களுடன் வந்தான். அது பெரிய அளவிலான கிணறு. 20 சதுர அடி பரப்பளவு, 30 - 40 அடி ஆழமுள்ளது. அவர் ஒவ்வொருவருக்கும் கற்றுக்கொடுத்து வரும்போது, அமீர் மேலே நின்று பார்த்துக் கொண்டிருந்தான். பேபாய் அண்ணன், அமீரை கிணற்றுக்குள்ளே தாவச் சொன்னார். முதலில் மறுத்தவன், திடீரென்று கிணற்றுக்குள்ளே தாவி விட்டான். அவன் நீச்சலடிக்க முடியாமல் தண்ணீரில் தத்தளித்தபோதுதான் எங்களுக்கெல்லாம் தெரியும், அவனுக்கு நீச்சல் தெரியாது என்று. உடனே பேபாய் அண்ணன், தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்த அமீரை தலைமுடியைப் பிடித்து மேலே தூக்கிக்கொண்டு வந்தார். அமீர், கொஞ்ச நேரம் படிக்கட்டில் உட்கார்ந்திருந்தான். மீண்டும் பேபாய் அண்ணன் அவனை அழைத்தபோது, சற்றுமுன் நடந்த எதைப் பற்றியும் யோசிக்காமல், ஒரு குழந்தையைப்போல அவரை நோக்கித் தாவினான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவன் நன்கு நீச்சலடிக்க ஆரம்பித்து விட்டான்.

எல்லாம் முடிந்து, பேபாய் அண்ணன் வீட்டிற்கு முன்னால் வந்து, அவருடைய அம்மாவிடம், எப்படி பேபாய் அண்ணன் அவனுக்கு நீச்சல் கற்றுக்கொடுத்தார் என்பதையும் எப்படி அவன் தண்ணீருக்குள் மூழ்கிப் போனான், அவனை எப்படி அவர் தலைமுடியைப்பிடித்து தூக்கினார் என்பதையும் மிகவும் ஆர்வத்துடனும் உற்சாகத்துடனும் பல முக பாவங்களுடனும் செய்கைகளுடனும் சொல்லிக் கொண்டிருந்தான். 'பாருங்கள், எவ்வளவு திறமையுள்ள மகனை வைத்துள்ளீர்கள்' என்று அமீர், பேபாய் அண்ணனின் அம்மாவிற்கு சொல்வதுபோல் இருந்தது.

எங்களுக்குள் சண்டை வரும்போதெல்லாம், அமீருக்கு மிகவும் விசனமாகி விடும். இரண்டு பக்கமும் அவனுடைய ஊமை மொழியில், சமரசம் செய்வான். ஒருத்தருக்கொருத்தர் கைகுலுக்கச் சொல்வான். அதற்கும் முடியவில்லையென்றால், பேபாய் அண்ணனிடம் சென்று, எல்லாவற்றையும் சொல்லி, அவரை அழைத்து வருவான். நாங்கள் எல்லோரும் சண்டை போடாமல், ஒற்றுமையாக, சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று விரும்புவான்.

கிறிஸ்துமஸ் சமயத்தில், இரவு நேரங்களில், ஆலயத்திலிருந்து ஒரு குழுவாக, வீடு வீடாகச் சென்று, பாடல்களைப் பாடி, கிறிஸ்துமஸ் மற்றும் புத்தாண்டு வாழ்த்துதல்களைச் சொல்வோம் (கேரல் ரவுண்ட்ஸ்). அக்கார்டின், கிட்டார், டாம்ரின், டபுள் பாங்கோஸ் போன்ற இசைக் கருவிகளையெல்லாம் எடுத்துச் சென்று, அவற்றிலிருந்து இசையெழுப்பி, ஜனங்களை உற்சாகப்படுத்துவோம். இது இரவு முழுக்க, விடிய, விடிய செல்லும். ஒவ்வொரு வீட்டிலும் எங்களுக்கு சாப்பிட டீ, பிஸ்கெட் மற்றும் பலகாரங்களெல்லாம் கொடுப்பார்கள். அமீரும் எங்களுடன் உற்சாகமாக வருவான். பெட்ரோமாக்ஸ் லைட்டை தோளின்மேல் சுமந்துகொண்டு வருவான். இசைக் கருவிகளை இசைப்பதையும் பாடுவதையும் மிகவும் சந்தோஷமாக பார்ப்பான்.

ஒவ்வொருத்தர் வீடு வரும்போதும் அந்த வீட்டாரின் பிள்ளைகள் எப்படி இசைக் கருவிகளை வாசிக்கிறார்கள், எப்படி பாடுகிறார்கள், எப்படி

விளையாடுகிறார்கள் என்று பெரிய தொரு சாதனையை செய்ததுபோல, ஒரு குழந்தையைப்போல அங்கிருக்கும் பெரியவர்களிடம் விவரித்து சொல்லுவான். அவன் கண்களை அகல விரிப்பதும் புருவங்களை சுருக்குவதும் முக பாவங்களை மாற்றுவதும் எல்லோரும் அதைப் பார்த்து சந்தோஷப்படுவதும் இன்றைக்கும் நினைவில் இருக்கின்றது.

கிறிஸ்துமஸ், புத்தாண்டு, ஈஸ்டர் போன்ற விசேஷ தினங்களன்று, அமீருக்கு யாரேனும் ஒருவர், புது சட்டை, பேண்ட் என்று வாங்கிக் கொடுத்து விடுவார்கள். மற்ற நாட்களெல்லாம் அமீர், முழங்கால் வரை தொள தொளவென்று ஒரு டவுசர் மற்றும் அரைக்கை சட்டையோடு காணப்படுவான். அவன், புது சட்டை, பேண்ட்டை போட்டுக் கொண்டு வந்து, எங்கள் ஒவ்வொருவரையும் கூப்பிட்டு ஒரு சிறு குழந்தையைப்போல காண்பிப்பான். யார் அதை வாங்கிக் கொடுத்தார்கள் என்பதையும் ஒவ்வொருத்தரிடமும் வந்து சொல்லுவான். எங்கள் பாராட்டையெல்லாம் மிகவும் பெருமையுடன் ஏற்றுக்கொள்வான். நாங்கள் ஒவ்வொருவரும் போட்டிருக்கும் புது டிரஸ்ஸையும் பார்த்து, ரொம்ப நல்லா இருக்கு என்பான்.

நாங்களெல்லாம் பாடகர் குழுவில் இருப்பதால், வெள்ளை அங்கிகளை அணிந்துகொண்டு, ஆலயத்திற்குள் சென்று, எங்களுக்கென்று உள்ள இருக்கைகளில் அமர்ந்து விடுவோம். சபை ஆராதனையின்போது நாங்களெல்லோரும் பாடுவதை அமீர் ஆலயத்தின் ஏதாவதொரு மூலையில் உட்கார்ந்து ரசிப்பான். அவனுடைய முகத்தில் மிகுந்த சந்தோஷம் காணப்படும்.

சனிக்கிழமைகளில், ஆலயத்தில் வைத்து நடக்கும் பாடகர் குழு பயிற்சியின்போது, பாடகர் குழுவின் தலைவரான விங்ஸ்டன் அண்ணன், எங்களுக்கெல்லாம் பேஸ், டென்னர், ஆல்ட்டோ, சொப்ரானோ என்று தனித்தனியாகவும் பின்னர் எல்லோரும் சேர்ந்தும் பாட பயிற்சி கொடுப்பதையும் ஆர்கன் வாசிக்க குட்டிக்கு (இவன் பெயர் சாமுவேல் ஞானராஜ். அவர்களுடைய வீட்டில் அவன்தான் கடைக்குட்டி, அதினால் அந்த பெயர்) சொல்லிக் கொடுப்பதையும் ஜெபராஜ் அண்ணனுக்கு வயலின் வாசிக்கக் கற்றுக் கொடுப்பதையும் அமீர் உற்றுக் கவனிப்பான். பின்னர், பயிற்சி முடிந்தவுடன், ஓடி வந்து, ஒவ்வொருத்தரையும் பாராட்டுவான். அவனே பாடினதுபோல, ஆர்கன் மற்றும் வயலின் வாசித்ததுபோல மகிழ்வான். விங்ஸ்டன் அண்ணனிடம் போய், எப்படி ஜெபராஜ் அண்ணன் வயலின் வாசித்தார், எப்படி குட்டி ஆர்கன் வாசித்தான், எப்படி நாங்களெல்லோரும் பாடினோம் என்பதை, அமீருக்கு பேச வராததால், பலத்த செய்கைகளுடன் செய்து காண்பிப்பான். அதைப் பார்த்து எல்லோரும் சிரிப்போம், சந்தோஷப்படுவோம்.

ஞாயிற்றுக்கிழமைகளில், ஆலய காம்பவுண்டு சுவருக்கு அருகில் வாசலில் நின்று, வருகின்ற எல்லோரையும் பார்த்து சிரிப்பான். எல்லோர் வீட்டிலும் ஏதேனும் ஒரு வேலையை செய்து கொடுத்திருப்பான். எல்லோரும் அவனைப் பார்த்து ஓரிரு வார்த்தை பேசிவிட்டு போவார்கள். சில வாலிப பெண் பிள்ளைகள் நன்கு வளர்ந்திருப்பார்கள். அதை அமீர், அந்த பிள்ளைகளின் அம்மாமார்களிடம் விவரித்து சொல்வது மிகவும் ரசிக்கும்படியாக இருக்கும். முன்னர் அந்த பிள்ளை எப்படி குட்டியாய் இருந்தது என்று கையை முழங்காலுக்குக் கீழே வைத்து காண்பிப்பான். பின்னர் இப்போது அந்த பிள்ளை எப்படி வளர்ந்திருக்கின்றது என்பதைச் சொல்ல, அந்த பிள்ளையின் அம்மாவை காண்பித்து, அவர்களின் காதுவரை வளர்ந்துள்ளது என்பதை சுட்டிக் காண்பிப்பான். அந்த பிள்ளைகளுக்கு அவன் செய்கின்ற காரியம் வெட்கமாக இருக்கும். எல்லோரும் தங்களையே பார்க்கிறார்களோ என்பதுபோல அவர்களுக்கு இருக்கும். அமீருக்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் தெரியாது. ஒரு ஆலயத்தின் வாசலில் வைத்து இப்படி செய்யலாமா என்பதும் தெரியாது.

எங்கள் கணக்கு வாத்தியார் கிறிஸ்டோபர் சார், இதைப் பார்த்தவுடன் ஓடி வந்து, அமீரை வேறு ஒரு வேலை இருப்பதுபோல, வேறு பக்கமாக அழைத்து சென்று விடுவார். இந்த குடும்பத்திற்கு, சைகை மூலம் ஆலயத்திற்குள்ளே போகும்படி சொல்லி விடுவார்.

சில சமயம், இங்கு காலனியில் உள்ளவர்கள் சிலர் வேலைக்கென்று அவனை வெளியூருக்கும் கூட்டிச் செல்வார்கள். அப்படி ஒவ்வொரு முறை அவன் வெளியூர் சென்று திரும்பும்போதும் யாருடன் போனானோ, அவர்களைப் பற்றி மிகவும் உயர்வாக சொல்லுவான். பெரிய கம்பெனி, பெரிய ஆபிஸ், நிறைய பேர் வேலை பார்க்கிறார்கள் என்பான். இவன் யாருடன் போனானோ அவர்கள்தான் அங்கு தலைமைப் பொறுப்பில் இருக்கிறார் என்பான். யாரையுமே அவன் குறைத்து பேசியதில்லை.

ஒரு முறை, கல்லூரியில் பேபாய் அண்ணன், போல் வால்ட் விளையாடியதை அமீர் எங்களுடன் வந்து பார்த்தான். வீட்டிற்கு திரும்பியவுடன், அமீர் போய், பேபாய் அண்ணனின் மூத்த சகோதரர் ராஜேந்திரன் அண்ணனிடம், அவன் பார்த்ததை விவரித்து காண்பித்ததை இன்றுவரை என்னால் மறக்க முடியவில்லை. பேபாய் அண்ணன் எப்படி ஒரு உயரமான கம்பை வைத்து ஓடிப்போய் மிக உயரே எழும்பி, அங்கிருந்து தாவினார் என்பதை, அவன் தன்னுடைய கைகளை வானத்திற்கு நேராக உயரே காண்பித்து, எவ்வளவு தூரம், எவ்வளவு வேகமாக ஓடி வந்தார் என்பதையும் அங்கிருந்து எப்படி குதித்தார் என்பதையும் அவன் பல முக பாவங்களுடன், ஒரு சர்க்கஸில் நடந்த சாகசத்தை சொல்வதுபோல, பல செய்கைகளுடன் செய்து காண்பித்து சொன்னான். அதைப் பார்த்து

நாங்களெல்லாரும் சிரித்து சந்தோஷப்பட்டோம். அதையொட்டி நாங்கள்கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சளைக்காமல் விவரித்து சொன்னான். அமீர், பேபாய் அண்ணனை வியப்புடனும் சந்தோஷத்துடனும் பார்த்துக்கொண்டே இருந்தான். அவனே அப்படி ஒருசாதனையை செய்ததுபோல சந்தோஷப்பட்டான்.

ஒரு நாள் காலை, பள்ளிக்கூடத்திற்கு சென்றுகொண்டிருந்தபோது, தெருவில், புழுதியில், அமீர், எங்கள் பள்ளிக்கூட வாத்தியார் ஒருவருடன் கட்டிப் பிடித்து, புரண்டு, சண்டை போட்டுக் கொண்டிருந்தான். இருவரும் ஒருவருக்கொருவர் மாற்றி, மாற்றி அடித்துக் கொண்டார்கள். பின்னர், தெருவின் பக்கவாட்டிலிருந்த முட்செடிகளுள்ள பள்ளத்தில் உருண்டு விழுந்து, சண்டை போட்டார்கள். அந்த வழியே வந்தவர்களெல்லாம், அமீரை மறுபடி, மறுபடி கூப்பிட்டுப் பார்த்தார்கள். அவன் செவி கொடுக்கவே இல்லை. யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

அவனுக்குள்ளும் கோபம், சோகம், வருத்தம் போன்றஉணர்வுகள் உண்டுஎன்பதை அப்போதுதான் உணர்ந்துகொண்டோம். அவனுக்குள் ஏதோவொரு பாதிப்பு பெரிய அளவில் உண்டாகியுள்ளது. அதின் விளைவே இந்த கோபமும் சண்டையும். எதனால் அந்த பாதிப்பு உண்டானது, இதில் அமீரின் பங்கு என்ன என்பது இதுவரைக்கும் யாருக்கும் தெரியாது. அமீரும் சொல்லவில்லை. அவரும் சொல்லவில்லை.

பால்ராஜ் கென்னடி
<kennedymediaindia@gmail.com>

# 21இ சுடலை மாடன் கோவில் தெரு

சந்தியா நடராஜன்



திகசி, விக்ரமாதித்யன், வண்ணதாசன்

'10 டவுனிங் தெரு' என்ற முகவரி எப்படி வரலாற்றில் இடம்பெற்றுவிட்டதோ, அந்த முகவரி உச்சரிக்கப்படும்போது எத்தகைய அரசியல் உணர்வலைகள் எழுகிறதோ அந்தளவுக்கு தமிழ் படைப்புலகத்தில் பெருமிதம் கலந்த முக்கியத்துவம் கொண்ட விலாசம், '21இ சுடலை மாடன் கோவில் தெரு'. அது திருநெல்வேலி நகரத்தின் இலக்கிய மையம். கம்யூனிஸ்ட் தோழர்களின் உற்சாக பூமி. இங்குதான் மனிதநேயம் என்ற ஒற்றைப் பண்பில் தனது படைப்பையும் செயல்பாடுகளையும் வெளிப்படுத்தி 90 ஆண்டுகள் வாழ்ந்த தி.க.சி. என்ற மானுடன் தன் தவச்சாலையில் தனித்திருந்து செயல்பட்டார்.



'தனித்திருந்து' செயல்பட்டார் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லப்பட வேண்டும். அவர் முதுமைக் காலத்தில் தனிமையில் இருந்ததாகச் சொல்வது தவறு. He was never alone. He enjoyed solitude. ஏகாந்த நிலையில் எந்நேரமும் எழுச்சியோடு பேசிக்கொண்டிருந்தவருக்கு தனிமை ஏது? மனித உறவுகளில் தன் ஆன்ம சக்தியை முளையடித்து வைத்திருந்தவரை தனிமை எப்படி அண்டும்?

வானாந்திர வெளிகளில் தனித்திருக்கும் மன அமைதியோடும் களிப்போடும் தன் குரல் ஒலியின் ஆரவாரத்தோடு ஒரு சமதர்ம சாம்ராஜ்யத்தில் வாழ்ந்த ஒரு சாதாரண பிரஜையை ஊரும் உலகமும் தங்களது

குருவாகவும் கொற்றவனாகவும் ஏற்று மகிழ்ந்தது. 'அப்படியா' என்று கேட்டால் அப்படித்தான் என்று பதில் சொல்ல வேறு யாரும் முன்வரவேண்டிய அவசியத்தை தி.க.சி. விட்டுச் செல்லவில்லை. அவரது வாழ்வும் வாழ்ந்த விதமும் படைத்த இலக்கியமும் உருவாக்கிய ஆளுமைகளும் நேரடிச் சான்றுகள். எல்லாவற்றுக்கும் உச்சமாக அவரது இறுதி ஊர்வலத்தில் தேர்தல் பணிகளையும் ஒதுக்கி வைத்துவிட்டு மயானம் அடையும் வரை 'வீரவணக்கம் திகசிக்கு' என்று முழங்கிச் சென்ற மூன்று தலைமுறை கம்யூனிஸ்ட்களின் குரல்கள் தி.க.சி. மீது இந்த மண் கொண்டிருந்த மரியாதையை காற்றில் எழுதிச் சென்றன. இந்த ஒலியால் மட்டுமே தி.க.சி.யின் உற்சாகக் குரலொலியை அவர் ஒடுங்கிவிட்ட நிலையில் வென்றெடுக்க முடிந்தது.

வல்லிக்கண்ணனால் இலக்கிய உலகுக்கு அறிமுகமானவர் தி.க.சி. நெல்லை காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகவும் கம்யூனிஸ்டுகளின் நண்பனாகவும் செயல்பட்ட சிந்துபூந்துறை சண்முகம் அண்ணாச்சிதான் தி.க.சியை பொதுவுடைமை அரசியலுக்கு வழிகாட்டியவர். தி.க.சி.யும் கம்யூனிஸ்ட் தலைவர் இரா.நல்லக்கண்ணுவும் ஒரே ஆண்டில் பிறந்த (1925) தோழர்கள். இவர்கள் இருவரும் கம்யூனிஸ்ட் கட்சியில் அடியெடுத்து வைத்த காலம் கம்யூனிசம் என்றால் பயங்கரவாதம் என்று சர்க்கார் பொருள் கொண்டிருந்த காலம். 1948இல் கம்யூனிஸ்ட் கட்சி இந்தியாவில் தடை செய்யப்பட்டிருந்தது. இந்தத் தருணத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் தன்னை பிணைத்துக் கொண்ட தி.க.சி இறுதிவரை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியில் உறுப்பினராக தொடர்ந்தார்.

1944இல் தாம்கோஸ் வங்கியில் காசாளராகச் சேர்ந்த தி.க.சி. 1964இல் ஓய்வு பெறும் வரை 25 ஆண்டுகள் பணிபுரிந்தார். இவரது பணிக்காலம் முழுவதும் தன்னை தொழிற்சங்க இயக்கத்தில் அர்ப்பணித்துக் கொண்டு பல இன்னல்களுக்கு ஆளானார். கேரள மாநிலம் கொச்சின் நகரத்திற்கும் இடமாற்றம் செய்யப்பட்டார். 1964இல் வங்கிப் பணிக்கு விடை கொடுத்துவிட்டு சோவியத் நாடு பத்திரிகையின் தமிழ்ப்பிரிவில் ஆசிரியர் குழுவில் தன்னை இணைத்துக் கொண்டார். இதே காலகட்டத்தில் 1965 முதல் 1972 வரை கம்யூனிஸ்ட் இயக்க பத்திரிகையான 'தாமரை'யின் ஆசிரியராகச் செயலாற்றி தாமரையை கமழச் செய்தார். தி.க.சி.யின் ஆய்வுக் கட்டுரைகளும் விமர்சனங்களும் 'தாமரை'யில் இடம் பெற்று வந்தன.

'ஹிந்துஸ்தான்', 'அனுமான்', 'கிராம ஊழியன்' போன்ற ஆரம்ப கால தமிழ் இதழ்களில் எல்லாம் பங்களித்து வந்த தி.க.சி., சிந்துபூந்துறை சண்முகம் அவர்கள் தொடங்கிய 'நெல்லை பப்ளிஷிங் ஹவுஸ்' மூலம் ரஷ்ய சீன அரசியல் நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார். 'கார்ல் மார்க்சின் இல்வாழ்க்கை', 'போர்வீரன் காதல்'. 'வசந்த காலத்திலே', 'குடியரசுக் கோமான்' ஆகியவை தி.க.சி.யின் குறிப்பிடத்தக்க மொழிபெயர்ப்பு நூல்கள். ஏறக்குறைய 6 திறனாய்வு நூல்களை எழுதியுள்ளார். இப்படித் தொடர்ந்து அரசியல் களத்திலும் இலக்கியத் தளத்திலும் தளராது செயலாற்றி வந்த தி.க.சி.யின் படைப்பான 'விமர்சனங்கள், மதிப்புரைகள், பேட்டிகள்' என்ற நூலுக்கு சாகித்ய அகாதெமி 2000ஆம் ஆண்டில் விருது வழங்கி கௌரவித்தது. அது வெறும் நூலுக்கான அங்கீகாரம் மட்டுமல்ல, மூப்பையும் பிணியையும் புறம்தள்ளி அரசியலிலும் இலக்கியத்திலும் நேர்மையை மட்டுமே துணைகொண்டு, தமிழ் இலக்கிய உலகில் புதிய முகங்களை வரவேற்று அரவணைத்து இதழியலில் புதிய வகைமைகளை அறிமுகப்படுத்தி, தன்னை ஒரு இலக்கிய இயக்கமாக மாற்றிக் கொண்ட படைப்பாளியின் ஆகிருதிக்கு அளிக்கப்பட்ட விருதாகவும் அதை நாம் அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டும். அவர் வாழ்ந்த வாழ்வு ஓர் முன்னுதாரணம்; அவர் பேருள்ளமும பெருந்தன்மையும் மானுடப் மாண்புகள்.

தி.க.சி.யின் 90ஆவது பிறந்த நாளன்று (30.03.2017) தி.க.சி.யின் 1948ஆம் வருடத்திய நாட்குறிப்புகளைத் தொகுத்து 'தி.க.சி.யின் நாட்குறிப்புகள்' என்ற நூலை வெளியிட ஏற்பாடாகியிருந்தது. இந்நூலின் தொகுப்புப் பணியை தி.க.சி.யின் நிழலாக நின்று செய்து முடித்திருந்தார் வே. முத்துக்குமார். 'சந்தியா பதிப்பகம்' திரு. சௌந்தரராஜன் முழுவீச்சில் பதிப்பு பணிகளில் ஈடுபட்டிருந்தார். என் கைபட்டு உருவான அந்த நூல் மார்ச் மாதம் 14ஆம் தேதி தி.க.சி.யின் கரங்களைச் சென்றடைந்தது. அவரது இலக்கிய வாழ்வின் இறுதியானதும் உச்சபட்ச மகிழ்ச்சி எய்திய நாளாகவும் அந்நூல் இருந்திருக்கும். அடுத்த சில தினங்களில் தி.க.சி. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். அவரது உடல்நிலை சீராகாமல் தளர்வுற்று வருவதைச் சூசகமாக கலக்கத்தை மறைத்த குரலில் தெரியப்படுத்தி வந்தார் வண்ணதாசன். 'நான் பார்க்க வருகிறேன்' என்று சொல்லாமல் திருநெல்வேலிக்குப் பயணப்பட்டேன். பாதிப் பயணத்தில் வரக்கூடாத செய்தி வந்து சேர்ந்தது. மார்ச் 25ஆம் தேதி இரவு அவரது சொந்த வீட்டில் அவரது உயிர் பிரிந்துவிட்டது. மறுநாள் காலை '21இ சுடலை மாடன் கோவில் தெரு', தவச்சாலையில் அந்த உரத்தக்குரல் ஒலிக்க வில்லை. அந்த ஆலமரம் சாய்ந்திருந்தது, வண்ணதாசன் என்கிற கல்யாண்ஜி என்கிற விழுதை பற்றிக்கொள் என்று சொல்லாமல் சொல்லிவிட்டு.

'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்பார்கள். அதுபோல அவர் பெயர் சொல்ல ஒரு



விக்ரமாதித்யன், வண்ணதாசன்

பிள்ளையை தமிழ் படைப்புலகத்திற்கு அளித்துச் சென்றிருக்கிறார் தி.க.சி. அவர்தான் ஆறடி உயர அவரது அன்பு மகன் வண்ணதாசன் என்கிற வசீகரன். அவையத்து முந்தி இருக்கிற மகன் 'இவன் தந்தை என் நோற்றான்' என வியக்கும் வகையில் தமிழின் சிறந்த கதைக்காரனாகவும் உன்னத கவிஞனாகவும் இருக்கிறார். தந்தையைப் போலவே மகனும் சாகித்திய அகாதெமி விருது வென்றவர். 2016ஆம் ஆண்டில் வண்ணதாசனின் 'ஒரு சிறு இசை' என்ற தொகுப்புக்கு சாகித்திய அகாதெமி விருது வழங்கியது. இதுவும் சந்தியா பதிப்பகம் வெளியிட்ட நூல் என்பது எங்களுக்கு பெருமகிழ்ச்சி மட்டுமல்ல; பெருமையும்கூட. '21இ சுடலைமாடன் கோவில் தெரு' வீட்டில் இருதலைமுறைகளுக்கு இந்திய சர்க்காரின் அமைப்பான சாகித்திய அகாதெமி விருது வழங்கி கௌரவித்துள்ளது. தந்தையும் மகனும் நிகழ்த்திய இந்த சாதனை இந்திய இலக்கிய வரலாற்றில் வேறெங்கும் இடம்பெறவில்லை. இத்துனைக்கும் இவ்விருவரது செயல்பாடுகளும் தன்னிச்சையானவை. இருவரின் இலக்கியப் பாதைகளும் வெவ்வேறானவை. இருவேறு உலகங்களின் சுழற்சிகள்.

இருவருக்கும் பொதுவானவை என்று ஏதேனும் உண்டென்றால் அவை அன்பும் பேரன்பும் தான்; தந்தையின் அன்பு பேய்மழை. பெய்த மழையில் ஈரமான மணலின் வாசம் மகன் காட்டும் அன்பு. அது கமழும்; காட்சிப்படுத்தாது; உள்ளே உறைந்து கிடக்கும்; உருகிப் பிரவாகம் எடுக்கும், அவர் கைவிரல் பட்ட காகிதத்தில் கதைகளாய், கவிதைகளாய், கடிதங்களாய்; அவர் கதைகளில் வண்ணதாசன்; கவிதைகளில் கல்யாண்ஜி. சுற்றமும் நட்பும் வாஞ்சையோடு கல்யாணி என்று அழைக்கும். ஆவணங்களில் அவரது பெயர் கல்யாண சுந்தரம்.

22.08.1946இல் பிறந்த வண்ணதாசன் தந்தையைப் போலவே வங்கித் துறையில் தனது வாழ்க்கையைத் தொடங்கினார். ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். தனது வங்கி வாழ்க்கையையும் இலக்கிய வாழ்க்கையையும் தனித்தனியாகப் பிரித்து ஒன்றோடு ஒன்று உரசிக் கொள்ளாமல் வாழ்ந்தவர். அவர் அதிகபட்சமாக அலுவலக கம்யூட்டர் தாளை நான்காக மடித்து யாருக்காவது கடிதமெழுதியிருப்பார். இதைத் தவிர அவரது வாழ்க்கையை பிரத்யேகமாக வைத்திருந்தவர். அவரது ஜீவன வாழ்க்கையும் ஜீவித வாழ்க்கையும் அதனதன் நிலையில் பூரணமானவை. அவரது நோக்கு தீர்க்கமானது; நோக்கம் பவித்ரமானது.

வங்கிப் பணியின் இடமாற்ற உத்தரவுகளால் வண்ணதாசன் இடம்பெயர்ந்து வாழ்ந்த இடங்கள் நிலக்கோட்டை, அம்பாசமுத்திரம், தூத்துக்குடி, மதுரை, சென்னை, திருநெல்வேலி, செட்டிக்குறிச்சி என ஆறேழு இடங்கள் மட்டுமே. இந்த இடங்களில் இவர் கண்டு கொண்ட மனிதர்களே வண்ணதாசனின் கதைமாந்தர்கள். இவர்களது அகமன அதிர்வுகளே வண்ணதாசன் கதைகளில் புதையுண்டிருக்கிற கன்னி வெடிகள். 'நான் பயணித்த தூரம் குறைவு, பார்த்த இடங்கள் குறைவு' என்று நேர்ப்பேச்சுகளில் இவர் கூறி வந்தாலும் எதிர்ப்படும் மனித முகங்கள் ஒவ்வொன்றும் இவருக்கு ஒவ்வொரு உலகத்தைவிட்டுச் செல்கின்றன. அந்த ஒவ்வொரு உலகத்தின் பெருமூச்சும் பெருவியப்பும் இவருக்கு அனுபவங்களாகின்றன.

வண்ணதாசனின் முதல் சிறுகதைத் தொகுப்பு 'கலைக்க முடியாத ஒப்பனைகள்' 1976ஆம் ஆண்டு 'அஃக்' இலக்கிய இதழ் நடத்திய பரந்தாமனால் வெளியிடப்பட்டது. அச்சு நேர்த்திக்காக அல்லது வடிவமைப்பிற்காக தேசிய விருதை வென்றெடுத்த நூல் அது. இடைப்பட்ட இந்த 42 ஆண்டுகளில் அவரது கதைகள் அநேகமாக அனைத்து வகை தமிழ் இதழ்களிலும் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றன. 'தோட்டத்திற்கு வெளியிலும் சில பூக்கள்', 'கனிவு', 'மனுஷா மனுஷா', 'சமவெளி', 'பெயர் தெரியாமல் ஒரு பறவை', 'உயரப்பறத்தல்', 'நடுகை', 'கிருஷ்ணன் வைத்த வீடு', 'பெய்தலும் ஓய்தலும்', 'ஒளியிலே தெரிவது', 'ஒரு சிறு இசை', 'நாபிக் கமலம்', 'கமழ்ச்சி' ஆகியவை இதுவரை வெளிவந்துள்ள வண்ணதாசனின் பதினான்கு சிறுகதைத் தொகுப்புகள். 'சின்னுமுதல் சின்னுவரை' இவரெழுதிய ஒரே குறுநாவல்.

வண்ணதாசன் தனது நண்பர்களுக்கு எழுதிய கடிதங்கள் தொகுக்கப்பட்டு 'சில இறகுகள் சில பறவைகள்' என்றும் 'வண்ணதாசன் கடிதங்கள்' என்றும் வெளியாகியுள்ளன. தமிழில் இதுவரை வெளிவந்துள்ள கடித இலக்கியம் சார்ந்த நூல்களில் பெரிதும் பேசப்பட்டவை இந்நூல்கள் என்பதில் இரண்டாம் கருத்துக்கு இடமில்லை.

'அன்னம்' பதிப்பகம் வெளியிட்ட நவகவிதை வரிசையில் முதல் தொகுப்பாக கல்யாண்ஜியின் முதல் கவிதைத் தொகுப்பான 'புலரி' வெளிவந்தது. அதுமுதலாக இன்றுவரை பத்துக்கும் மேற்பட்ட கல்யாண்ஜியின் கவிதைத் தொகுப்புகள் தொடர்ந்து வெளிவந்துள்ளன. சமீபத்தில் வெளிவந்துள்ள

'ரணங்களின் மலர்ச்செண்டு' முற்றிலும் மாறுபட்ட வடிவங்களையும் மொழிநடையையும் கொண்ட ஒரு கவித்துவ ரத யாத்திரை. இதை கோலகலமாகக் கொண்டாடி மகிழ்கின்றனர் மூன்றாம் தலைமுறையினர்.

எல்லா உலக இலக்கியங்களும் மனித வாழ்வின் அர்த்தத்தை நோக்கிய தேடல்களாக அதன் புதிர்த்தன்மையை அவிழ்க்க முனையும் முயற்சிகளாகவே உள்ளன. 'மகாபாரதம்' என்றோ நிகழ்ந்ததல்ல, அன்றாடம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஒரு கதைதான். மனிதர்களை முன்வைத்து வியாசரின் வரிகள் காலந்தோறும் வெவ்வேறு வடிவங்களில் எழுதப்படுகின்றன. மனிதன் அப்படியேதான் இருக்கிறான், யுகங்கள் மாறுகின்றன. இந்த சிக்கலை அல்லது இந்த விந்தையை அல்லது இந்த விடுகதையை வண்ணதாசன் இப்படி எழுதுகிறார்:

> கடைசிவரை எல்லாம், ஆண் - பெண் விளையாட்டும், வயிறுக்கும் மனதுக்குமான இழுபறியும் தான், இடையில் இந்த மூளை விடுகிற வெற்றுச் சவால்களும் ஆடத் தூண்டுகிற பகடையாட்டங்களும். எந்தச் சூதும் முடிவதில்லை. எந்தச் சூதாடியும் நிஜத்தில் தோற்று கனவில் ஜெயித்து நிறுத்த முடியாத ஆட்டத்தில் நிலை குலைகிறான். தோற்றவன் கண்களில் ஜெயித்தவனை விட ஜெயம் மட்டுமே அதிகம் மினுங்குகிறது.

ஆக கம்யூனிச அரசியல் பார்வையில் தி.க.சி. மனிதனை தேடினார் என்றால் மகன் வண்ணதாசன் மனிதனின் அகஉலகை கண்டுகொண்டு புறஉலக உறவுகளோடு ஒரு உரையாடலை நிகழ்த்திக்கொண்டே இருக்கிறார்.

21இசுடலை மாடன் தெருவில் வாழ்ந்த வண்ணதாசனை அதே தெருவில் 28ஆம் நம்பர் வீட்டில் வளர்ந்த சோமசுந்தரம் தனது இலக்கிய வாழ்வின் வழிகாட்டியாக ஏற்றுக்கொண்டார். தி.க.சி. ஏற்றிய தீபம் இன்னொரு அகல் விளக்கில் ஒளி கூட்டியது. அந்தத் தெருவெங்கும் தீபங்கள் ஒளிர்ந்தன.

இந்த சோமசுந்தரம்தான் கவிஞர் கலாப்ரியாவாக இடைகாலில் தனது வாழ்க்கையை நிலை நிறுத்தியபடி கடந்த 50 ஆண்டுகாலமாக நவீன கவிதையின் தற்கால சுடரொளியாயும் தணலாயும் கணன்று கொண்டிருக்கிறார்.

> அழகாயில்லாததால்
> அவள் எனக்குத்
> தங்கையாகி விட்டாள்

என்ற கலாப்ரியாவின் ஆரம்ப கால கவிதை நான்கு மாமாங்கம் ஆகியும் தொடர்ந்து அடுத்தடுத்த தலைமுறையினரால் உச்சரிக்கப்பட்டு வருகிறது. இது 'அஃக்' இலக்கிய இதழில் 1972ஆம் வருடம் வெளியாகிய கவிதை. கலாப்ரியாவின் முதல் கவிதைத் தொகுப்பு 'வெள்ளம்' 1973ஆம் ஆண்டு பிரசுரமானது. அதைத் தொடர்ந்து 'தீர்த்த யாத்திரை' (1973), 'மற்றாங்கே' (1979), 'எட்டயபுரம்' (1983), 'சுயம்வரம்' (1985), 'உலகெல்லாம் சூரியன்' (1993), 'அனிச்சம்' (2000), 'வனம் புகுதல்' (2003), 'எல்லாம் கலந்த காற்று' (2007), 'நான் நீ மீன்' (2011), 'உளமுற்ற தீ' (2013), 'தண்ணீர் சிறகுகள்' (2014), 'சொந்த ஊர் மழை' (2015), 'தூண்டில் மிதவையின் குற்ற உணர்ச்சி' (2016), 'பனிக்கால ஊஞ்சல்', 'பேனாவுக்குள் அலையாடும் கடல்' (2017) என 17 கவிதைத் தொகுப்புகளும் 'கலாப்ரியா கவிதைகள்' என்ற பெருந்தொகுப்பு நூலும் வெளியாகியுள்ளன.

"நான் சொல்லப்படாதவற்றுடன் சொல்லக் கூடாதென்று ஒளித்துவைக்கப்பட்ட விஷயங்களையும் கவிதையாக்கினேன்" என்று வெளிப்படையாகப் பேசும் கலாப்ரியாவின் கவிதைகள் துயரத்தில் புரண்டு கொந்தளித்து எழும் சொற்களால் ஆனவை. "கடந்த காலம் என்பது என் இறுக்கமான ஆரம்ப ஓடு பாதை. துயர நினைவுகள் என் உயவு எண்ணெய்" என்று தனது படைப்பாக்கம் பற்றி தீர்க்கமாகப் பதிலளித்திருக்கிறார் கலாப்ரியா. அது முற்றிலும் உண்மை என்றே புரிந்துகொள்ள முடிகிறது. வெறும் துயரத்தை எழுதி வந்திருந்தால் மட்டும் கலாப்ரியா இந்த உயரத்தை அடைந்திருக்க முடியாது. மனித வாழ்வு அநேகமாக எல்லா மனிதர்களுக்கும் தாராளமாக வழங்கி வரும் அலைக்கழிப்பையும் அவநம்பிக்கையையும் அதனால் அவதிக்குள்ளாகும் மனநிலையையும், எல்லோரும் தத்தம் மனநிலையாக உணரும் வகையில் கலாப்ரியா பதிவு செய்திருப்பதுதான் அவரது வெற்றிக்கான வழியாகப் புலப்படுகிறது.

சம்ஸார நிலையிலிருந்து நிர்வாண நிலைக்கு தன்னை எளிதில் கடத்திக் கொண்ட கலைஞனாக காட்சியளிக்கிறார் கலாப்ரியா – 'Conditioned Bing' என்ற நிலையிலிருந்து 'Being unconditioned என்ற நிலையே கலாப்ரியாவின் படைப்பு நிலையும் வாழ்நிலையும் என்று சொல்லலாம். அவரால் ரோட்டரி சங்க செயற்பாடுகளிலும் கலந்துகொள்ள முடிகிறது. சாதாரண எம்.ஜி.ஆர். ரசிகன் மனோபாவத்தையும் அடையமுடிகிறது. சபரிமலைக்குப் புனிதப் பயணம் செல்லும் கலாப்ரியாவால் வெப்ப நாயகிகளை பற்றியும் எழுத முடிகிறது. உள்ளக் குமுறல்கள் அவரது வாழ்க்கை முறையின் சீர்வரிசையை கலைத்ததில்லை. வீசப்படுவது வெண்சாமரமோ விஷக்கணையோ அவரால் தடுமாறாமல் செயல்பட முடிகிறது. அவரது எல்லா செயல்பாடுகளுக்கும் கட்டற்ற சுதந்திரமான படைப்பாக்கங்களுக்கும் அவருக்கு உறுதுணையாக நிற்பது எல்லோராலும் 'டீச்சர்' என்று அழைக்கப்படுகிற அவரது மனைவி சரசுவதி. கலாப்ரியாவுக்கு டீச்சர் அமைந்தது ஒரு கொடுப்பினை.



வண்ணதாசன், கலாப்ரியா

கலாப்ரியாவின் மனத்தடைகள் அற்ற இலக்கிய உலகின் அகல நீளங்களை எப்போதும் ஆச்சரியத்துடன் அகம் மகிழ்ந்து இப்படி எழுதுகிறார் வண்ணதாசன்.

> புதுக்கவிதை வரலாற்றில் மட்டுமல்ல; நவீன தமிழ் இலக்கிய வரலாற்றுப் பக்கங்களிலும் கலாப்ரியா ஒரு தவிர்க்க முடியாத அத்தியாயம். ஒருவகையில் தீராநதி. ஒரு வகையில் நகல் செய்யமுடியாத ஒரு வெளிச்சம். பின் தொடர மட்டுமே முடியும்.

தம்பி கொடுத்து வைத்தவர்தான். கலாப்ரியாவின் இன்னொரு தோழனும் தென்காசிக்காரரான நம்பி என்கிற விக்கிரமாதித்தன் எழுதிய மகாவாக்கியம் ஒன்று உண்டு. கலாப்ரியாவுக்கு இதைவிட சிறந்த மணிமகுடம் யார் சூட்ட முடியும்: அது இதுதான்:

> இரண்டாயிரம் ஆண்டு தமிழ் கவிதையிலேயே காணக்கிடைக்காத உணர்வெழுச்சியும் துடியும் கட்டவிழ்ந்த மன வெளிப்பாடும் கொண்ட அபூர்வமான கவிதைகள் கலாப்ரியாவின் கவிதைகள்; முற்றிலும் மனத்தடைகளை உதிர்த்து உதறியெழுந்து நிற்கும் கவிதைகள்; கலாப்ரியாவின் கவித்துவம் ஒப்பிட இயலாதது என்பது மட்டுமில்லை. ஒரு இனத்தில் மொழியில் எப்பொழுதோ நிகழக்கூடியதுமாகும்.

'வெள்ளம்' கவிதைத் தொகுப்பு வெளிவந்து 36 ஆண்டுகளுக்குப் பிறகு கலாப்ரியா என்ற கவிஞன் கவிதையிலிருந்து உரைநடைக்கு தடம் மாறினார். 2009ஆம் ஆண்டில் அவருடைய 'நினைவின் தாழ்வாரங்கள்' என்ற கட்டுரைத் தொகுப்பு வெளிவந்தது. அப்போது கவிஞர் தமிழச்சியின் நூல் வெளியீட்டு விழாவுக்காக சென்னை தியாகராய நகரில் ரெசிடென்சி ஹோட்டலில் கலாப்ரியா தங்கியிருந்தார். 'நினைவின் தாழ்வாரங்கள்' முதல் பிரதி அவரைச் சென்றடைந்த போது கவிஞர் ஷங்கர் ராம சுப்பிரமணியனும் இன்னும் சில நண்பர்களும் உடன் இருந்தனர். எல்லோரும் ஓர் ஏகாந்த நிலையில். கேக் வெட்டி கொண்டாடினோம். வாழ்வும் வாழ்வனுபவங்களும் பொதியப் பெற்ற கடந்த கால தாழி 'நினைவின் தாழ்வாரங்கள்'. உரைநடையில் புரள ஆரம்பித்த அடுத்த நூல், 'உருள் பெருந்தேர்'. தற்போது இந்த நூலை 'ஆனந்த விகடன்' மறுபிரசுரம் செய்துள்ளது. எம்.ஜி.ஆர். ரசிகனாகவும் தமிழ் சினிமா பித்தம் ஏறிய கவிஞனாகவும் திரிந்த கலாப்ரியாவின் ஞாபக அடுக்குகள் நிலைகுலையாதவை மட்டுமல்ல. இன்று வரை அதில் கொஞ்சமும் சேதாரம் இல்லை. இவரது மொழியும் நினைவுகளும் உரைநடையில் உச்சம் தொட இவருக்கு உதவி புரிந்தன. 'சுவரொட்டி', 'காற்றின் பாடல் மறைந்து திரியும் நீரோடை', 'மையத்தைப் பிரிகிற நீர் வட்டங்கள்', 'என் உள்ளம் அழகான வெள்ளித்திரை', 'போகின்ற பாதையெல்லாம்', 'சில செய்திகள் சில படிமங்கள்' என பல்வேறு தொகுப்புகள் வெளியாகியுள்ளன. இவை பெரும்பாலும் சினிமா கட்டுரைகள் அல்லது கவிதையியல் பற்றிய கட்டுரைகள்.

2017இல் கலாப்ரியாவின் மூன்றாவது அவதாரம் நிகழ்ந்தது. அவரது முதல் நாவல் 'வேனல்' 2017 சென்னைப் புத்தகக் காட்சியை ஒட்டி வெளிவந்தது. புத்தகக் காட்சி மைதானத்தில் அண்ணன் கல்யாணியுடன் எழுத்தாளர்கள் எஸ். ராமகிருஷ்ணன், நாஞ்சில் நாடன், வண்ணநிலவன் ஆகியோர் கைகோர்த்து மகிழ்ச்சியோடு வேனலை வரவேற்றார்கள். 2017ஆம் ஆண்டில் தான் கலைஞர் பொற்கிழி விருதும் கலாப்ரியாவுக்கு அளிக்கப்பட்டது. கலைமாமணி விருது, சிற்பி இலக்கிய விருது, ஜெயகாந்தன் விருது உள்ளிட்ட எண்ணற்ற விருதுகளும் பெற்றவர் கலாப்ரியா.

ஊரின் பார்வையையோ நவநாகரிகத்தையோ சற்றும் பொருட்படுத்தாமல் ஒற்றைக் கோமணத்துடன் உழுது களைத்து கரையேறிச் செல்லும் விவசாயியைப் போலவும் காவிரியில் நீராடி மார்மீது கட்டிய ஒற்றைப் பாவாடையில் நீர் சொட்டும் தலைமுடியோடு சிறுசுகளோடு சிரித்துப் பேசி செல்லும் ஊர்க்காரி போலவும் தளங்களைப் பற்றியும் தடங்களைப் பற்றியும் எவ்வித அபிப்ராய பேதங்கள் இன்றி எல்லோருடனும் சாதாரண மனிதனாக வலம் வரும் கலைஞன் கலாப்ரியா இன்னும் நிறையவே சாதிப்பார். எல்லாப் பெருமைகளும் சுடலைமாடன் கோவில் தெருவுக்கே.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

**வாழ்த்துகிறோம்**



இந்த ஆண்டின் மொழிபெயர்ப்புக்கான சாகித்ய அகாதெமி விருது தமிழில், மாலன் அவர்களுக்கு 'ஒரு பிணந்தூக்கியின் வரலாற்றுக் குறிப்புகள்' என்ற நூலுக்காக வழங்கப்படுகிறது.

மாலன் அவர்களுக்கு அம்ருதாவின் வாழ்த்துகள்.

(சென்ற இதழ் தொடர்ச்சி..)

# தமிழர்களின் அலைந்துழல்வுச் சித்திரங்கள்

**அ. ராமசாமி**

ஆசி கந்தராஜாவின் 'ஒரு அகதியின் பேர்ளின் வாசல்' நாவலை வாசித்தபோது போலந்தில் இருந்த இரண்டாண்டுக் காலத்துக் காட்சிகள் எனக்குள் திரும்பவும் படமாக விரிந்தன. அத்தோடு கடந்த கால் நூற்றாண்டுக்காலமாக நான் வாசித்த ஈழத்தமிழ் இலக்கியப் பரப்பின் பல்வேறு காட்சிகளும் இந்த ஒற்றை நாவல் வாசிப்பின்போது திருப்புக் காட்சிகளாக நகர்ந்துகொண்டிருக்கின்றன.

நாற்பதாண்டுக்கால ஈழத்தமிழ் இலக்கியத்தைப் 'போரிலக்கியம்' என ஒற்றைச் சொல்லால் விளித்துக் கடக்கும் நிலை இன்று உள்ளது என்றாலும், அதற்குள் வெவ்வேறு காலகட்டங்களும் அவற்றிற்கேற்ப உரிப்பொருள் - உள்ளடக்கப் பொருண்மை வேறுபாடுகளும் உள்ளன.

பேரினவாதக் கருத்தியல் காரணமாக ஏற்பட்ட இனமுரண்பாட்டால் ஈழத்தமிழர்கள் தங்களைச் சிறுபான்மை இனமாக உணரத் தலைப்பட்டதைப் பேசிய காலகட்டம் முதல் நிலையென்றால், உரிமைப்போராட்டங்களை நடத்திப் பார்த்துவிட்டு, ஆயுதப் போராட்டத்திற்குத் தள்ளப்பட்ட சூழலை முன்வைத்த கவிதைப் பெருக்கத்தை இரண்டாவது கட்டமாகச் சொல்லலாம். தங்கள் நிலைப்பாடுகளை வலியுறுத்தவும் ஆயுதப் போராட்டத்திற்கு இளைஞர்களை ஈர்க்கவும் வாய்ப்பளிக்கும் கவிதை வடிவத்திலிருந்து, போர்க்களக் காட்சிகளை எழுதும் நோக்கத்தில் புனைகதைகளின் பக்கம் நகர்ந்தது; எழுத்தாளர்களும் நகர்ந்தார்கள். அது அடுத்த கட்ட இலக்கிய நகர்வு. இந்நகர்வில் பேரினவாத அரசோடும் அதற்கு உதவியாக வந்த இந்திய அமைதி காக்கும் படையென்ற பெயரில் இலங்கைத் தமிழர் பகுதிக்குள் நுழைந்த இந்திய ராணுவத்தோடும் சண்டையிட்ட போராளிக் குழுக்கள், வெவ்வேறு காரணங்களால் தங்களுக்குள்ளும் போரிட்டுக் கொண்டதையும் வாசிக்க முடிந்தது.



காரணமற்ற போர்களினால் அலைக்கப்பட்ட மக்கள், இலங்கையின் தமிழ்ப் பகுதிகளில் உயிர்வாழ முடியாத சூழல் ஏற்பட்ட நிலையில் உள்நாட்டு இடப்பெயர்வுகள் எழுதப்பெற்றன. உடைக்கப்பட்ட பாலங்கள், போக்குவரத்தற்ற காட்டுப் பகுதிகள், அத்துவானக் காடுகளில் நீண்ட நெடிய நடைப்பயணங்கள், இடையிடையே மரணங்கள் என உள்நாட்டு இடப்பெயர்வுகளை எழுதிய புனைவுகளும் அதற்குள் எழுதப்பெற்றன; வாசிக்கக் கிடைத்தன. சொந்த வீடுகளையும் கன்று காழிகளையும் காணிகளையும் விட்டுப் பிரியமுடியாத மனத்தோடு பெயர்ந்துபோனவர்கள் கண்ட போர்க்களக் காட்சிகளையும் அழிவுகளையும் எழுதிக் காட்டிய மூன்றாவது கட்டப் போரிலக்கியம், புலப்பெயர்வு நிலையையும் பேசத் தொடங்கின. இவ்வகைப் புனைவுகளும் கட்டுரைகளும் புலம்பெயர் தேசங்களிலிருந்தே பெரும் தொகைநூல்களாகவும் தொகுப்புகளாகவும் வாசிக்கக் கிடைத்தன.

புலப்பெயர்வை எழுதிய புனைவுகளில் பலவும் முறையான கடவுச்சீட்டும் நுழைவுச் சீட்டும் இல்லாமல் வெவ்வேறு நாடுகளுக்குப் பெயர்ந்தவர்களின் அலைவுகளையும் வலிகளையும் நெருக்கடியான வாழ்க்கை முறைகளையும் விரிவாக எழுதிக்காட்டின. முறையற்ற வழிகளில் கடவுச்சீட்டுகளைத் தயார்செய்து தருவதோடு போலியான நுழைவுச் சீட்டுகளையும் ஏற்பாடு செய்து தந்துபணம்பெற்றுக்கொண்ட குற்றச்செயல் கூட்டத்தினரால் அலைக்கழிக்கப்பட்ட வாழ்வும் எழுத்துகளில் பதிவாகியுள்ளன.



போதைப்பொருள் கடத்தல், பாலியல் வணிகம் என உலகம் முழுவதும் பரவிக்கிடைக்கும் இருட்டு உலகத்தோடு ஆயுதக்குழுக்களுக்கு உள்ள தொடர்புகளையும் அகதிகளாகச் சென்று சேரும் நாடுகளில் சந்தித்த துயரங்களையும் பனிப்பிரதேச வாழ்க்கையால் சந்தித்த உடல் நோவுகளையும் எழுதிய போர்க்கால இலக்கியம் இப்போது ஒருவித சமநிலைப் பார்வையை நோக்கி நகரத் தொடங்கியுள்ளது.

முள்ளிவாய்க்கால் பேரழிவு நடந்து பத்தாண்டுகளுக்கும் மேல் ஆகிவிட்ட நிலையில் கடந்த காலத்தின் மனவெழுச்சிகள், ஆயுதப் போராட்டத் தயாரிப்புகள், லட்சியவாதத்தின் பேரால் நிகழ்ந்த கொலைகளும் வன்முறைகளும் மறுபரிசீலனைக்குரியனவாக மாறியிருக்கின்றன. போராடிக் களைத்ததின் விளைவுகளை நடப்பும் காட்டுகின்றன; இலக்கியப் பதிவுகளும் பேசத் தொடங்கியுள்ளன.

போரிலக்கியத்தின் விரிவான இந்நகர்வின் பின்னணியில் ஆசி கந்தராஜாவின் 'ஒரு அகதியின் பேர்ளின் வாசல்' முக்கியமானதொரு வரவாகத்தோன்றுகிறது. நாவல் உள்பட எல்லாவகைப் புனைவுகளிலும் ஈடுபடும் எழுத்தாளர்கள் காலம், வெளி, பாத்திரங்கள் என்ற மூன்றையும் தங்கள் விருப்பம்போல உருவாக்குகிறார்கள். உருவாக்கி விரிக்கும்போது இம்மூன்று கூறுகளிலுமே இரண்டு வகையான உருவாக்கம் நடக்கிறது. ஒவ்வொரு கூறிலும் நேரடியான உருவாக்கமும் நினைக்கப்படும் புனைவாக்கமும் நிகழ்கின்றன. ஒரு புனைகதையில் இடம்பெறும் பாத்திரங்களைக் குறிப்பிட்ட காலம், வெளிகளில் உலவ விடும் நோக்கம் நடக்கும்போது அந்தக் குறிப்பிட்ட எல்லைக்குள் மட்டுமே இருப்பதில்லை. எழுதுபவரின் நினைவுகள் காலத்தை முன் பின்னாகவும் அசைபோடும்; பாத்திரங்களைச் சந்தித்தவர்களாகவும் சந்தித்தவர்களால் சொல்லப்பட்டவர்களாகவும் முன்வைக்கும்; அவர்கள் இயங்கும் வெளிகளைப் பார்த்தனவாகவும் கேட்டனவாகவும் காட்சிப்படுத்தும். இவையே எழுத்தென்னும் படைப்புச் செயலில் நடக்கும் வேதிவினை.

இந்த இடத்தில் நாவல் என்னும் இலக்கியவகை, காப்பியமென்னும்வடிவத்திற்குள் உருவான புதியவகை என்பதைப் புரிந்துகொள்ளவேண்டும். ஒருவருடைய நீண்ட வாழ்க்கை வரலாற்றை விரிவாகச் சொல்லும் நோக்கம் கொண்ட காப்பியத்தைப் போலல்லாமல் 'குறிப்பிட்ட' என்பதற்குள் எழுத்தாளரை நிறுத்தி அதன் மீதான சில தளங்களில் விவாதங்களையும் விசாரணைகளையும் முன்னெடுக்கும் வகையாக நாவல் இலக்கியம் உருவாகியிருக்கிறது. ஐரோப்பிய மொழிகளில் உருப்பெற்ற நாவல் வகையைத் தமிழும் அப்படித்தான் உள்வாங்கியிருக்கிறது

ஆசி கந்தராஜா இந்த நாவலில், ஜெர்மனியின் பேர்ளின் நகரத்தையும் 1982 முதல் 2017 வரை யிலான முப்பத்தைந்து ஆண்டுக்கால அளவையும் அந்தக் 'குறிப்பிட்ட' என்பதற்குள் வைத்திருக்கிறார். பள்ளிக்கல்விக்குப் பின்னான உயர்கல்விக்காகப் பேர்ளின் நகரில் வசிக்க நேர்ந்த ஒருவனின் (பால முருகன்)தன் வரலாறு போல ஒரு வாழ்க்கைக் கதையும் இலங்கையில் உண்டான இனக்கலவரமும் அதன் தொடர்ச்சியான போர்க்காலமும் உண்டாக்கிய நெருக்கடியில் புலம்பெயர்ந்த இன்னொருவனின் (தவராசா) முன்னிலைக்கதையும் இணைநிலையாக நகர்த்தப்பட்டுள்ளன. மேல்நாட்டுக்கல்வி, அதனால் கிடைக்கும் வேலைவாய்ப்பு, அதனைக் கைப்பற்றிய ஆடவனுக்கு யாழ்ப்பாணச் சமூகத்தில் கிடைக்கச் சாத்தியமான மரியாதைகள், அதை அளிக்க நினைக்கும் குடும்பங்களின் போட்டிகள், அதனைப் பெரிதாக நினைக்காத காதல் மனம், காதலை வெளிப்படுத்தத் தயங்கும் ஆண் - பெண் மனநிலைகள் என நகரும் தனியொரு இளைஞனின் அகவாழ்க்கை ஒரு அடுக்காக நகர்கிறது. அவனது மனத்திற்குள்ளே ஒரு புறநிலை எதிர்கொள்ளலாக பேர்ளின் நகரம் இருக்கிறது. அவன் கற்கச் சென்ற காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் வலுப்பெற நினைத்த சோசலிசக் கட்டுமான அரசும் அதனை இல்லாமல் ஆக்க நினைத்த முதலாளித்துவப் பொருளாதாரக் கட்டுமான அரசும் எனக் கருத்தியல்/ அரசியல் முரணாகப் பேர்ளின் நகரம் நாவலுக்குள் விரிக்கப்பட்டுள்ளது.

கல்விநிலையங்களில் தொடங்கும் அந்த முரணிலைக் கருத்தியல் ஒவ்வொரு நிறுவனங்களிலும் வெளிப்படுகிறது. இந்த விவாதங்களின் வழியாக ஆசி. கந்தராஜா தனது நாவலை உலக இலக்கியங்களின் விவாத த்தளத்திற்குள் நகர்த்தியிருக்கிறார். அதனாலேயே நாவலுக்குள் ஒன்றிற்கு மேற்பட்ட சொல்முறைகள் இருப்பது போன்ற வடிவம்

உருவாகியுள்ளது; ஒரு நேர்கோடற்ற - நான் லீனியர்- கதைசொல்லியின் திறனைக் கொண்டிருப்பது வெளிப்பட்டுள்ளது

தனியொரு மனிதனின் அகநிலை விவாதங்களையும் புறநிலைப் பார்வைகளையும் விரிவாக எழுதும் நாவல், அதன் இணைக்கதைக்குள் கதைசொல்லியை நகர்த்துவதன் மூலம், இலங்கை அரசியலின் - ஈழத்தமிழர்களின் போராட்ட வாழ்க்கையின் சாட்சியாகக் கதைசொல்லியை மாற்றுகிறது. உரிய ஆவணங்கள் இல்லாமல் ஜெர்மனிக்குள் வந்திறங்கும் ஈழத்தமிழ் அகதிகளின் இருப்பையும் பணிகளையும் அல்லது தண்டனைகளையும் உறுதி செய்யும் நீதிமன்ற விசாரணைக்கு உதவும் ஒருவனாகப் பாலமுருகன் கதைக்குள் இருக்கிறான். அதன் உச்சநிலையாகப் பள்ளிக்காலத்து நண்பன் தவராசாவின் கதையையும் நீதிமன்றத்தின் முன்னால் வைக்க வேண்டிய சூழல் வருகிறது. அவர்களின் சந்திப்பு உணர்ச்சிகரமான நாடகத்தின் உச்சநிலைக்காட்சியின் துயரப்படிமங்களாக எழுதப்பெற்றுள்ளது.

மொழி, இனம் என்ற தனது அடையாளம் சார்ந்த அணுகுமுறையால் பலரையும் காப்பாற்றிய பாலமுருகன், நண்பன் தவராசாவையும் காப்பாற்றிப் புதியதானதொரு வாழ்க்கைக்குள் நுழைத்துச் சாட்சி ஒப்பம் இடுகிறான்.

நாற்பதாண்டுக் கால ஈழத்தமிழ்ப் போராட்ட வரலாற்றைக் குறுக்குவெட்டாக வாசிப்புக்குத் தருகின்ற இந்நாவலின் கதை சொல்லி, ஈழத்தமிழர்களின் போராட்டங்கள், போர்கள், புலம்பெயர்தலின் அலைக்கழிப்புகள் என எதிலும் நேரடியாக ஈடுபட்ட அனுபவம் இல்லாத ஒருவர் என்பதைக் குற்றச்சாட்டாகச் சிலர் கருதக்கூடும். ஆனால், ஒவ்வொன்றிலும் தொடர்புடைய மனிதர்களின் செயல்பாடுகளையும் நோக்கங்களையும் நகர்வுகளையும் விசாரித்து அறிந்து முன்வைக்கும் ஓரிடத்தில் இருந்தவர் அந்தக் கதைசொல்லி என்பதையும் அவர்கள் உணரக்கூடும். இலங்கையில் இனப்பிரச்சினையின் தொடக்கநிலைக் குறிப்புகள் வெளிப்பட்ட 1970 களின் இறுதியாண்டுகளிலேயே - பள்ளிப்படிப்பு முடிந்தவுடனேயே-ஐரோப்பாவிற்குள் நுழைந்து விட்டதால் இலங்கையின் போர்க்காலச் சூழலை விலகி நின்று பார்க்கும் வாய்ப்பைப் பெற்றவராகத் தன்னை இருத்திக் கொண்டு, தனது மனிதர்கள் வெவ்வேறு சுழலில் சிக்கி, அகதி வாழ்வில் படும் அவல நிலையைக் குறித்த அக்கறைகளை வெளிப்படுத்துகிறார். தனது நண்பனின் வாழ்க்கைப்பாடுகளுக்காக அவர்காட்டும் பரிவு என்பது ஒருவிதத்தில் தனது இனத்து மனிதர்கள், நீண்ட நெடிய போராட்டத்தைத் தனதாக்கிக் கொண்டு தொடரும் அலைக்கழிப்புகளையும் துயரங்களையும் சுமந்துகொண்டு அலைகிறார்களே என்ற மனக்குமுறல்களின் வெளிப்பாடும் கூடத்தான்.

போர்க்கால ஈழத்தமிழ்ப் பகுதிகளையும் புலம்பெயர் தேசத்து வெளிகளையும் எழுதிக் காட்டிய நாவல்கள் பலவும் கடந்த நாற்பதாண்டுக் காலத்தின் குறுக்குவெட்டுத் தோற்றத்தைத் தந்துள்ளன. அவற்றிலிருந்து ஆசி. கந்தராஜாவின் நாவல் இரண்டு முக்கியமான விலகலைக் கொண்டிருக்கிறது. முதலாவது விலகல் ஐரோப்பிய மையவாதமாகவும் முரண்பாடாகவும் விவாதிக்கப்படும் அரசுருவாக்க முரண்பாடு. பெர்ளின் நகரை மையப்படுத்தி பணவீக்கம், வேலை வாய்ப்பின்மை வழியாக முதலாளித்துவ நாடுகள் மேற்கொண்ட நெருக்கடிகள் இந்நாவலில் முக்கியமான விவாதப் பொருளாக்கப்பட்டுள்ளன. இந்த விவாதங்கள் உலக நாவல்கள் பலவற்றில் விவாதிக்கப்படும் சொல்லாடல்களுக்கு இணையாக எழுதப்பெற்றுள்ளது. இரண்டாவது விலகல் ஈழத்தமிழர்களின் புலம்பெயர் வாழ்வில் பம்பாயின் தாராவிப் பகுதியின் பங்கு. அகதி வாழ்க்கையில் தமிழ்நாட்டுத் தமிழர்களின் பரிவு, அரசமைப்புகளின் குரூரமான எதிர்மறைப்போக்கு போன்றன பலரால் எழுதப்பெற்றுள்ளன. ஆனால், இதில் பம்பாய் நகரத்துக் குற்றச்செயல் கும்பல்களின் இடம் விரிவாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளது. போலியான கடவுச்சீட்டு உருவாக்கம், விசா உரிமங்கள் தயாரித்தல், ஆள்மாறாட்டம், போதைப்பொருள் கடத்தலுக்கு அகதிகளைப் பயன்படுத்துதல், அப்பாவிப் பெண்கள் மீதான பாலியல் குரூரங்கள் என பம்பாய் நகரின் இருட்டான வாழ்க்கை இதுவரை எழுதப்படாத பகுதிகளாக இந்நாவலின் வழியாகவே வாசிக்கக் கிடைக்கின்றன.

பழைய மரபான சமூகத்தின் எதிர்பார்ப்புகளைப் புதிய மனிதனொருவன் புறங்கையால் ஒதுக்கிவிட்டு முன்னேறும் அகநிலை மாற்றத்தை விவரிப்பதில் தொடங்கி ஈழத்தமிழர்களின் வாழ்க்கைக்குள் ஆயுதப் போராட்டம் ஏற்படுத்தியுள்ள அவலத்தின் கசடுகளை விவாதித்து மறுபரிசீலனையைக் கோரும் இந்நாவலின் வரவு முக்கியமானதொரு வரவு. ●

அ. ராமசாமி <ramasamytamil@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

